# வாடா மலர்

தி. நா. சுப்பிரமணியன்





கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை-4.

[விலை ரூ. 1/-

# நன்றி

ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர், தமிழ்நாடு பெரும் புகழும் பெற்று உலகத்தின் பல பாகங்களிலும் தன் செல்வாக்கைச் செலுத்தி வந்தது. வாணிகத் துறையில் மேம்பட்டு விளங்கிய அவர்களைக் கண்டு பலரும் பொறாமை கொண்டார்கள். வருஷவாரியில் ஏராளமான பொன்னையும் பொருளையும் தாங்கள் தமிழ் நாட்டுக்குக் கொட்டிக் கொடுக்க நேரிடுவதைக் கண்டு யவனர்கள் வயிறு எரிந்தது சரித்திரப் பிரசித்தம்.

அதை ஆதாரமாகக் கொண்டு பின்னிய இந்தக் கதை மூன்று வருஷங்களுக்கு முன் அகில இந்திய ரேடியோவின் சிற்றலை ஒலிபரப்பில் வாரத்துக்கு ஒரு முறையாக ஆறு நாட்களில் ஒலிபரப்பப் பெற்றது. உடனுக்குடன் சுதேசமித்திரன் வாரப் பதிப்பிலும் வெளிவந்தது.

குறிப்பிட்ட கால அளவுக்குள் ஒலிபரப்ப வேண்டியிருந்ததால் கதையின் சில பகுதிகள் சுருக்கப்பட்டிருந்தன. முதலில் எழுதிய உருவத்தில் பன்னிரண்டு அத்தியாயங்களோடு இப்போது கதை வெளியிடப்படுகிறது.

தி. நா. சுப்பிரமணியன்

சென்னை, 1950.

# பொருளடக்கம்




THE MA.
MYL

# வாடா மலர்

## 1

## கடற் பிரயாணம்

"ஏன் இது இவ்விதம் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கிறது?"

அந்தக் குரலில கம்பீரம் தலை தூக்கி நின்றது; அதனுடன் சிறிது வருத்தமும் ஆத்திரமும் கலந்து தொனித்தன.

"ஏனுதி, எங்களால் கூடுமான வரையில் வேகமாகவே தோணியைச் செலுத்திக்கொண்டிருக்கிறோம். ஆனால் காற்று நன்றாக வீசவில்லையே!"

நாவாய்க்காரர்கள் மிகப் பணிவுடனே தெரிவித்துக் கொண்டாலும், அதை அவன் காதில் வாங்கிக்கொள்ளவில்லை.

"காற்று அடிக்கவில்லையா? இதை விடத்தான் பிய்த்துக்கொண்டு போகுமோ? பாய்களைச் சரியாகக் கட்டுங்கள்."

இவ்விதம் சொல்லிவிட்டு அவன் லேசாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பிலே கேலியும் கொஞ்சம் கலந்திருந்தது.

நினைவு தெரிந்த பிராயம் முதல் உப்புத் தண்ணீரிலே கிடந்து, உழன்று, கடலில் படகுகளைச் செலுத்தும் மாலுமிக்குத் தொழில் முறையின் நுணுக்கங்களைக் கூறத் தான் முன்வந்தது அவனுக்கே ஆச்சரியமாகவோ அசம்பாவிதமாகவோ தோன்றவில்லை. வேறு சமயமாக

இருந்திருந்தால் அவன் அப்படிச் சொல்லியிருக்க மாட்டான். மரககலத்தின் கதியை அவர்கள் வழியிலேயே விட்டிருப்பான். ஆனால் இப்போதோ அவன் கரை சேரும் நேரத்தை எதிர்பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தான். அவன் மனத்தில் எழுந்த வேகமே அவனை அவ்விதம் கூறத் தூண்டியது.

நாவாய்க்காரர்கள் அவனுக்குப் பதில் சொல்ல விரும்பவில்லை. அந்த விதமாக வார்த்தையை வளர்த்துவதால் பயன் ஒன்றும் ஏற்படாது என்பதை அவர்கள் நன்றாக அறிந்துகொண்டனர். எப்படியும் அவன் எஜமான்; அவர்கள் வேலைக்காரர்கள். அதனால் மீகாமன், "அப்படியே செய்கிறோம்" என்று சுருக்கமாகக் கூறி விட்டுப் போய்விட்டான்.

ஆயினும் அவன் தலைவன் விருப்பத்தை அலட்சியம் செய்ய மாட்டாமல் பாய்மரத்தின் சமீபம் சென்றான். பாய்களை அவிழ்த்து இந்தப் புறமும் அந்தப் புறமுமாக மாற்றி மாற்றித் திருப்பிக் கட்டிப் பார்த்தான். ஆனால் தோணியின் வேகத்தில் எந்த விதமான முன்னேற்றமும் உண்டாகவில்லை. ஏற்கனவே பாய்கள் சரியானபடி, காற்று வாக்கிலேயேதான் கட்டப்பட்டிருந்தன. இதை அவன் முன்னரே நன்றாக அறிவான்.

அப்போது பகல் பதினெட்டு நாழிகைப் பொழுது இருக்கும். சூரியன் வானத்தின் உச்சியிலே கொஞ்சம் மேற்கே சாய்ந்து உக்கிரமாகக் காய்ந்துகொண் டிருந்தான். கடலில் நாற்புறமும் எங்கே பார்த்தாலும் அமை; நிலவியது. கொந்தளிக்கும் கடலும் கதிரவன் வெப்பம தாங்காமல் அடங்கிக் கிடந்தது. நிர்மலமான வானமும் அக்கினிப் பிழம்புபோல எரியும் சூரியனும் கடலில் பிரதி

பலிக்க, சிற்றலைகளால் அப்பிரதிபிம்பங்கள் சிதறுண்டு பார்ப்பவர் கண்களைக் கூச வைத்தன. அந்த நிலைமையில் காற்று எப்படி வீசும்?

எனினும் கொஞ்சங்கூடக் காற்று இல்லாமலும் இல்லை. உவர் நீரால் வெப்பம் அதிகமாக ஏறிய உஷ்ணக் காற்று, தோணியின் தளத்தில் நிற்பவர்மீது நெருப்பைக் கக்குவதுபோல மெல்ல அசைந்துகொண்டிருந்தது. சலனமே இல்லாமல் இருந்திருந்தால், மாலுமிகள் துடுப்புகளைக் கொண்டாவது படகைத் தள்ளியிருப்பார்கள். அதற்கும் வழி இல்லாமல் போய்விட்டது.

அன்றி அந்த மரக்கலம் தனியாகச் சென்றுகொண்டிருக்கவில்லை. ஐம்பது படகுகள் கொண்ட கூட்டத்தில் அதுவும் ஒன்று. மற்றப் படகுகளை விட்டு அதை மட்டும் வேகமாகச் செலுத்திக்கொண்டு போக மாலுமிகள் உடன்படவில்லை. அவ்விதம் தனியாகப் பிரிந்து முன்னதாகச் சென்றால் ஒருகால் தங்களுக்கு ஏதேனும் விபத்து நேரிடவும் கூடும் என்று அவர்கள் பயந்தனர்போலும்.

அந்தப் பக்கங்களிலே கடற் கொள்ளைக்காரர்கள் அதிகம். எட்டு, பத்து மரக்கலங்கள் கொண்ட கூட்டத்தையே அவர்கள் தாக்கிக் கொள்ளையடித்துக்கொண்டு போய்விடுவார்கள். அப்படி இருக்கத் தனியே அவர்களிடம் அகப்பட்டுவிட்டால் தப்புவது ஏது? அதனாலேயே அந்த மாலுமிகள் தங்கள் படகைக் கூட்டத்தினின்றும் விலக்கித் தனியாக முன்னதாகச் செலுத்தவும் விரும்பவில்லை.

ஒவ்வொரு படகிலும் அதன் பாதுகாப்புக்கென்று போர்வீரர்கள் சிலரை ஏற்றிக்கொண்டு போவது வழக்கம். அதன்படியே அப்போதும் போர்வீரர்கள்

காவலுக்கு வந்துகொண் டிருந்தார்கள். ஆயினும் கொள்ளைக்காரர்கள் வந்து தாக்கும்போது, நாற்பது ஐம்பது படகுகளும் கூட்டமாகச் சென்றால் அவற்றில் உள்ள வீரர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து தங்களைத் தாக்கும் கடற் கொள்ளைக்காரர்களை எதிர்த்துச் சண்டையிட்டு வெற்றி கொள்ள முடியும். தனியாக அகப்பட்டுக்கொண்டால், ஒன்றிரண்டு கலங்களில் உள்ளவர்களால் அது சாத்தியமில்லை.

அதனால் எந்தப் படகும் கூட்டத்தைவிட்டுப் பிரிந்து நெடுந்தூரம் சென்றுவிடாது. கூப்பிடு தூரத்திலேதான் ஒவ்வொன்றும் போய்க்கொண் டிருந்தது. எனினும் அலை கடல்மீது வெட்டவெளியில் பிறந்து வரும் காற்று எதனாலும் தடைப்படாமல், தங்கள் கலங்களின் பாய்கள்மீது நேரே தாக்கும்படியாக மாலுமிகள் அந்தப் படகுகளை நடத்திவந்தனர். ஒன்றை ஒன்று நெருங்காமல படகுகளை விலக்கி விலக்கி முன்னும் பின்னுமாகச் செலுத்தி வந்தனர். தவிர, அவை ஒன்றையொன்று நெருங்கிவிட்டால, அதனால் ஏற்படும் அலைகளால கலங்களுக்கு அதிகமான ஆட்டம் உண்டாகும் அன்றோ?

தலைவன் மட்டுந்தான் கரை சேரத் துடித்துக்கொண்டிருந்தான் என்பதில்லை. வேலைக்காரர்களும் அவனைப் போலவே எப்போது கரை தொட்டு நங்கூரம் பாய்ச்சிக் கீழே இறங்கப் போகிறோம் என்பதை எதிர்பார்த்திருந்தார்கள். அவர்கள் ஊரை விட்டுக் கிளம்பி ஏறக்குறைய ஒரு மாச காலம் ஆகிவிட்டது. அவர்கள் புறப்பட்டதிலிருந்து, பொழுது விடிந்தது முதல் சூரியாஸ்தமனம் வரையில் எங்கே பார்த்தாலும் ஒரே நீர்ப்பரப்பைத்தான் கண்டு வந்தார்கள். கவனத்தை வேறு வழிகளில் கவர்ந்து

இழுக்கக் கூடிய தோற்றம் எதுவும் இல்லாமல் ஒரே காட்சியை அவர்கள் எத்தனை நாட்கள்தாம் பார்த்திருக்க முடியும்? அவர்களுக்கு அலுப்பும் சலிப்பும் ஏற்பட்டுவிட்டன.

பொழுது கொஞ்சம் கொஞ்சமாக ஏறியது. சூரியனும் மேல்வானத்தில் நன்றாகச் சாய்ந்துவந்தான். வெயிலின் உக்கிரமும் சிறிது தணிந்தது. கடலில் ஏற்பட்ட கொதிப்பும் கொஞ்சம் அடங்கியது. இளந் தென்றல் மெதுவாக வீச ஆரம்பித்தது. அந்த வேகத்தில் அது பாய்களைத் தாக்கித் தோணிகளை நன்றாக உந்தித் தள்ளியது.

மாலை இளங்காற்று எல்லோர் மனத்தையும் சாந்தப் படுத்தும் தன்மை பெற்றது. அதனோடு பறவைகளின் சப்த ஜாலங்களும் காற்றிலே மிதந்து வந்து அவர்கள் காதுகளிலே அமிர்தவர்ஷம் போலப் புகுந்தன. பகல் முழுவதும் இரை தேடுவதற்காகப் பறந்து திரிந்த அவை தத்தம் கூண்டுகளுக்குத் திரும்பிச் சென்றுகொண்டிருந்தன. அந்திப் பொழுதின் ஆனந்தத்தை அவைகளும் அநுபவித்தன போலும்.

எந்த விதமாயினும் கரை சமீபத்திலே இருக்கிறது என்பதை உணர்த்தும் அந்தப் பக்ஷிகளின் ஓசையைக் கேட்டவுடனே மாலுமிகள் மெய்ம்மறந்து கூத்தாடினர். அதற்குப் பிறகே அவர்களுக்கு ஜீவகளை உண்டாயிற்று.

சாத்தனுக்கும் உள்ளம் குளிர்ந்தது. அவன் தான் முன்னர் நுகர்ந்த இன்பங்கள் எல்லாவற்றையும் எண்ணி மகிழ்ந்தான். அன்றைத்தினம் பகல் முழுதும் அவன் சிறிதும் படுக்கவில்லை. வெயிற் பொழுதில் அவன் உள்ளத்தே கொழுந்து விட்டுக் கிளம்பிய தாபம் அவனை

எரித்து வாட்டியது. அவனால் ஓர் இடத்தில் நிலைத்து இருக்க முடியவில்லை.

மாலை நேரத்தில், அவன் தன் வரவை எதிர் நோக்கி வழி பார்த்திருக்கும் அந்தோனியாவின் நினைப்பிலே லயித்திருந்தான். அப்படி இருக்க அவனுக்கு எப்படித் தூக்கம் வரும்?

உள்ளுக்குள் அடங்கிக் கிடந்த ஆசை உணர்ச்சிகள் யாவும் வெளிப்பட்டன. பழைய சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக அவன் மனத் திரையிலே தோன்றி மறைய லாயின.

"சூரியாஸ்தமனத்துக்குள் கரை சேர்ந்து நங்கூரம் பாய்ச்சிவிடவேண்டும்" என்று மீகாமனுக்கு உத்தர விட்டான் அவன்.

எப்படியாவது அன்றைப் பொழுதுக்குள் கரை சேர்ந்து அவளை அடையவேண்டும் என்ற ஆசை அவன் உள்ளத்திலே அடக்க முடியாமல் எழுந்தது. அதில் அதிசயம் ஒன்றுமில்லை என்றே கூற வேண்டும்.

## 2

# முன்கதை

சென்ற வருஷம் சாத்தன் இதே சமயத்தில் இதைப் போலவே கடற் பிரயாணம் செய்து வந்தான். அதுதான் அவன் முதல் முதலாகச் செய்த கடற் பிரயாணம். அதுவே அவன் தமிழ்நாட்டை விட்டு வெளிக் கிளம்பிய முதற் பயணமும் ஆகும்.

சொந்த ஊரிலிருந்து வெளியே புறப்பட்ட அவன் யவன தேசம் முதலிய பல இடங்களிலும் சுற்றித் திரிந்த அந்த ஆறு மாச காலமும் அவனுக்கு உல்லாசமாக இருந்தது. அந்தப் பயணமும் ஓர் உல்லாச யாத்திரை யாகவே இருந்தது. அது வரையில் அவன் என்றைக் கும் அறிந்திராத புது அநுபவங்களைப் பெற்றான்.

சாத்தன் நல்ல காளைப் பருவத்தினன். சுமார் முப் பது வயசு உடையவன். ஆயினும் அவனைப் பார்த்த எவ ரும் அவனை இருபத்தைந்து பிராயம் உள்ளவனாகவே மதிப்பிடுவர். நீண்டு கூரிய மூக்கும் பரந்த கண்களும் நெருங்கி அடர்ந்து வளர்ந்த மீசையும் வாய்ந்த அவனை அழகுத் தெய்வமாகிய மன்மதனது அவதாரம் என்றே எல்லோரும் கருதி வந்தார்கள்.

அவன் பாண்டி நாட்டைச் சார்ந்தவன். தலைமுறை தலைமுறையாகத் திரைகடல் ஓடித் திரவியம் தேடிய பழைய வணிக பரம்பரையில் வந்தவன். அவ்வளவு நாட் களும் வெளிக் கஷ்டம் ஒன்றையும் அவனுக்குக் கொடுக் காமல் கப்பலேறிப் பிற நாடுகளுக்குச் சென்று வாணி கம் செய்து வந்தார், அவனுடைய தந்தையாரான பதும

ணர். எவ்வளவு காலந்தான் அவர் அவ்விதம் சென்று வர முடியும்? தள்ளாத அந்தக் கிழ வயசில் அவரை வெளியூர் அனுப்புவதற்கு ஆகுமா? மற்றவர்களும் அதைப் பார்த்துச் சும்மா இருப்பரோ?

தந்தை கடல் கடந்து வெளிநாட்டிலே வியாபாரம் செய்துவந்த காலத்தைச் சாத்தன் வீணாகக் கழிக்க வில்லை. அவன் உள்நாட்டு வியாபாரத்தைக் கவனித்து வந்தான். அவன் குடும்பம் பெருமை பெற்று விளங்கு வதற்கு அவர்கள் நடத்திவந்த வாணிகம் அன்றோ கார ணம்? அப்படி இருக்க அவன் தன் குலத்தொழிலை விட்டு வேறு ஒன்றைக் கைக்கொள்ளுவானோ? தவிர, மீன் குஞ் சுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேணுமா!

அவனுடைய குடும்பத்தவர்கள் எல்லோரும் கப்பல வியாபாரிகள். யவனத்திலிருந்தும் சீனத்திலிருந்தும் தமிழ்நாட்டுக்கு வந்து வாணிகம் செய்த பலரும் சாத் தனை நன்றாக அறிவார்கள்.

அவாகள் எந்தவிதமான பயமும் இல்லாமல், தாங் கள் கொண்டு வந்த பண்டங்களைச் சாத்தனிடம் ஒப்பித்து அவற்றைத் தக்க விலைக்கு விற்றுவிடும்படி அவனையே கேட்டுக்கொள்வாாகள். அதே போலத் தங்களுக்கு வேண்டிய பொருள்கள் எவை எவை என்பதையும் அவ னிடமே குறித்துக் கொடுப்பர். குறைந்த விலையில் உயர்ந்த சரக்குகளை வாங்கிக் கொடுப்பான் சாத்தன் என்ற நம்பிக்கை அவர்களுக்குப் பூர்ணமாக இருந்தது.

சாத்தன் அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திர மானவனாகவே விளங்கினான். அவர்களை ஒருபொழுதும் ஏமாற்றியதில்லை. அவர்களுக்கும் அந்த நம்பிக்கை அவ னிடம் திடமாக ஏற்பட்டிருந்தது.

தந்தையின் தள்ளாமையைக் கண்டு சிறிதே மனஞ் சலித்தான் சாத்தன்; எனினும் அதை நீடிக்கவிடவில்லை. அவருடைய சுமையைத் தன் தோளால் தாங்குவது என்று தீர்மானித்து அதற்குத் தன்னை உரியவன் ஆக்கிக் கொண்டான்.

"அப்பா! எவ்வளவு காலந்தான் நீங்கள் வெளியூருக்குப் போய்வருவது? போன இடத்தில் உங்களுக்கு ஏதாவது காலையோ தலையையோ வலித்தால் நாங்கள் என்ன செய்வோம்? உங்களுக்கும் வயசாகிவிட்டது. இனி, நீங்கள் வீட்டோடு தங்கிவிடுங்கள். வியாபாரத்தை நானே பார்த்துவருகிறேன்."

ஒரு நாள் சாத்தன் தன் தந்தையைப் பார்த்து இவ்விதம் கூறினான். கிழவரும் ஒருவாறு இதை எதிர்பார்த்தே இருந்தார் என்று சொல்ல வேண்டும்.

ஏதோ வேண்டிய அளவு சம்பாதித்தாகிவிட்டது; இருப்பதைக் கொண்டே சுரைந்து தலைமுறைகள் கஷ்டப்படாமல் சுக ஜீவனம் செய்யலாம். என்றாலும் வியாபாரத்தில் அப்படி அசட்டையாக இருக்க முடியாது. ஒரு தடவை நிறுத்திவிட்டால், வியாபாரத்தை மறுபடியும் துவக்க முடியாது. அப்படியே ஆரம்பித்தாலும் பழைய பெருமை கிட்டுவது துாலபம். வாடிக்கைகள் போய்விடும்; தவிர நிலுவைகளும் சரியாக வசூல் ஆகா.

கிழவர் இதை நன்றாக அறிந்திருந்தார். ஆகவே வியாபாரத்தை நிறுத்திவிடாமல், தானே தொடர்ந்து அதை நடத்திவருவதாகத் தம் குமாரன் கூறியதைக் கேட்டதும் அவர் உள்ளப் பூரிப்பை அடைந்தார்.

அது மட்டுமோ?

வாணிகத் துறையில் மேம்பட்டு விளங்குபவர்களே நாட்டின் பிரமுகர்களாக விளங்குவதைக் கிழவரான பது மர் கண்கூடாகக் கண்டிருக்கிறார். அவர்கள் நாட்டு மக்க ளிடையே மதிப்பும் அரசாங்கத்திலே செல்வாக்கும் பெற்று வாழ்ந்துவருவதை அவர் அறிவார். அந்தப் பெருமையை அவர்களுடைய வம்சமே நீண்ட நாளாக அநுபவித்து வருகிறதன்றோ?

தம்முடைய நற்பெயரைச் சாத்தன் சிறிதும் குறைவுபடுத்தாமல் நிலைநிறுத்துவான் என்ற நம்பிக்கை கிழவருக்குத் திடமாக இருந்தது. அதனால் அவர் தம் மகன் வேண்டுகோளுக்குத் தடை ஏதும் சொல்லவில்லை; சம்மதித்துவிட்டார்.

சாத்தன் யவன தேசத்துக்குப் புதியவனேயன்றி யவ னர்களை அறியாதவன் அல்ல. மதுரைமா நகரிலே யவனச்சேரியில் உள்ளவர்களுடன் அவனுக்கு நெருங் கிய பழக்கம் உண்டு. அவர்களுடைய பழக்க வழக்கங் களையும் அவன் நன்றாக அறிவான். அவர்களது பாஷை யிலே கொஞ்சங்கூடத் தடங்கல் இல்லாமல் சரளமாகப் பேசுவான். அவர்கள் விரும்பும் விதமாகவே கவிதைச் சுவையை அள்ளி வீசி மனங் கனியப் பேசி அவர்களை மயக்கித் தன் வசமாக்குவதில் சாத்தன் மிகவும் சாமர்த் தியம் வாய்ந்தவன்.

ஆயினும், அவன் அலெக்ஜாந்திரியாவில் கண்ட காட்சியோ அவனைப் பிரமிக்கச் செய்தது. அவ்விதம் இருக்கும் என்று அவன் கனவிலும் கருதவில்லை. தமிழ் நாட்டிலே வசித்துவந்த யவனர்களை அலெக்ஜாந்திரியா வில் உள்ளவர்களுக்கு எந்த விதத்திலும் ஈடாகச் சொல்ல முடியாது என்பதை அவன் கண்டுகொண்டான். அந்த

நகரத்தைக் கண்டவுடனே, அது உண்மையில் பூலோகத்தில்தான் இருக்கிறதா என்ற சந்தேகத்தை அவன் அடைந்தான் என்றே கூற வேண்டும்.

அவனைப் போலவே வியாபாரத்துக்காக வெளிநாட்டார் பலர் உடன்வந்திருந்தனர். மணிபல்லவத்திலிருந்து வந்திருந்த நாகனும் அவர்களில் ஒருவன். சாத்தன் அவனுடன்தான் தங்கியிருந்தான்.

நாகன் அந்தத் துறையிலே பழகிய பேர்வழி. பத்து வருஷ காலத்துக்கு மேலாக அலெக்ஜாந்திரியாவுக்கு வந்து போய்க்கொண்டிருப்பவன். அவன் ஓர் உல்லாசப் பேர்வழி.

சாத்தனும் புதிய இடத்தில் தனக்குப் பரிசயம் ஏற்படும் வரையில் அந்த இடத்துப் பழக்க வழக்கங்களை அறிந்த ஒருவனுடைய துணை கிடைத்ததை எண்ணி மகிழ்ந்தான். நாகனோ பாண்டி நாட்டுப் பிரதம வணிகனைச் சிறிது காலமாவது உபசரிக்கும் பெருமை தனக்குக் கிட்டியதை நினைத்துச் சந்தோஷப்பட்டான். அன்றி, சாத்தனுடைய தந்தையாரான பதுமனிடமிருந்து தான் அடைந்துள்ள உதவிக்குத் தான் செய்யக்கூடியது எந்த விதத்திலும் அதிகமாகாது என்பதையும் அவன் அறிவான்.

அங்கே வந்து சேர்ந்த மறுநாள் மாலையில் அவ்விருவரும் வெளியே கொஞ்ச தூரம் உலவி வரப் புறப்பட்டுச் சென்றார்கள். புதிதாக வந்த இடத்திலே நகரத்தைச் சுற்றிப் பார்த்து, புதுமைகளைக் கண்டு ஆனந்தித்துப் பொழுது போக்கவேண்டும் என்பதே சாத்தனுடைய நோக்கம். அதனால் அவர்கள் தங்கியிருந்த நகர மத்தியிலிருந்து கிளம்பி நெடுந்தூரம் நடந்துவிட்டனர்.

ஜன நெருக்கம் உள்ள இடங்களைத் தாண்டிச் செல்வர்கள் வாசம் செய்யும் நகர்ப்புறத்தை அடைந்தார்கள்.

மேற்றிசையில் அந்திச் சூரியன் மலைவாயினின்றும் தன் சிவந்த பொன் வர்ணத்தைப் பூமியில் எங்கும் பரப்பி அழகு பெறச் செய்துவந்தான். மாலை வெயில் பட்ட பொருள்கள் எல்லாம் தங்கத்தால் உருக்கி வார்க்கப்பட்டனவே போலத் தகதகவென மின்னின.

சாலையின் இரண்டு பக்கங்களிலும் விசாலமான தோட்டங்களின் மத்தியில் அமைக்கப்பட்டிருந்த மாளிகைகளின் உன்னதத் தோற்றத்தைக் கண்டு மயங்கி வியந்து நின்றான் சாத்தன். அந்த மாளிகைகளிலிருந்து ஆடல் பாடல்களின் இனிய நாதம் காற்றிலே தவழ்ந்து வந்துகொண்டிருந்தது. நடுநடுவே ஒன்றிரண்டு இடங்களில் மதுவின் மயக்கத்தால் ஏற்பட்ட கலகலப்பும் கேட்டது.

எங்கே பார்த்தாலும் குதூகலமும் கொண்டாட்டமுமே நிறைந்திருந்தன. அவை சாத்தனையும் பற்றிக்கொண்டன. அவன் பொழுது போவதை அறியவில்லை; வழி நடையிலும் சலிக்கவில்லை; ஆனந்தத்தில மூழ்கி நாகனைத் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தான். அவன் மனம் எங்கெல்லாமோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது.

"வழி, வழி! விலகிப் போங்கள்."

அதிகாரத்துடன் கூறிய அந்தக் குரல் அவனைக் கனவு உலகத்தினின்றும் கீழே கொணர்ந்து பூமியில் தள்ளியது. பின்புறமாகப் பக்கத்திலிருந்து உண்டான அந்தச் சப்தத்தைக் கேட்டு, அவன் திடுக்கிட்டு நகர்ந்தான்; சாலையின் ஓரத்தை அடைந்தான். அதற்குப் பிறகே

அவன் தன்னை அவ்விதம் ஒதுங்கிப் போகச் சொன்ன வர் யார் என்பதை அறியத் திரும்பிப் பார்த்தான்.

நான்கு அடிமைகள் ஒரு பல்லக்கைச் சுமந்து வந்து கொண்டிருந்தார்கள். பல்லக்குடன் பக்கத்துக்கு ஒருவ ராக வேறு இரண்டு அடிமைகள் வந்துகொண் டிருந்தார் கள். குடையையும் விசிறியையும் தனித் தனியே ஏந்தி, பல்லக்கைப் பிடித்துக்கொண்டு ஓட்டமும் நடையுமாக அவர்கள் வேர்க்க விறுவிறுக்க வந்தனர்.

அந்த அடிமைகள் யாவரும் ஆப்பிரிக்கா தேசத்துக் கறுப்பு நீக்ரோ ஜாதியினர். சுருண்ட மயிருடைய பரட் டைத் தலையும், தடித்த மூக்கும், பருத்த உதடும் கொண்டு விளங்கிய அவர்கள் பார்வைக்கு விகாரமாகக் காணப்பட்டார்கள். அவர்கள் அணிந்திருந்த ஆபரணங் களும் உடுத்திருந்த உடையும் எவ்விதத்திலும் அவர்களை அழகு படுத்துவனவாக இல்லை.

தமிழ நாட்டு மூடு பல்லக்கைப் போலவே இருந்தது அந்தப் பல்லக்கு. ஆனால், அதற்குக் கதவு இல்லை. அதற்குப் பதிலாக அந்த இடத்தில் மெல்லிய திரை ஒன்று தொங்கிக்கொண் டிருந்தது. அந்தச் சமயத்தில் திரை நன்றாக விலகியிருந்தது. வீட்டுக்குள் அடைபட் டுக் கிடப்பதால் வெப்பம் தாங்காமல், சிறிது வெளிக் கிளம்பி, காற்றாடப் போய் வரலாம் என்று புறப்பட்ட வாகள் தங்களைத் திரையிட்டு மறைத்துக்கொள்வார் களோ?

பல்லக்கில் பெண் ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். அவளைக் கண்டவுடனே சாத்தன் அப்படியே பிரமித்து நின்றுவிட்டான். அவளுக்குப் பதினெட்டு, இருபது வயசு தான் இருக்கும். அவளைப் போன்ற எழில் வாய்ந்த

பெண்ணை அவன் அதுவரையில் கண்டதில்லை. பக்கத்தில் சென்ற நீக்ரோக்களின் விகார ரூபத்தால் அவளது அழகு அதிகச் சோபையுடன் விளங்கியது போலும்.

நாகனுக்கு அத்தகைய காட்சி புதிதன்று. அதைப் போல அவன் எத்தனையோ பார்த்திருக்கிறான். அதனால் அவன் அசட்டையாகவே சென்றான். ஆயினும் சிறிது தூரம் சென்ற பிறகு சாத்தன் தன்னுடன் வராததை அறிந்து திரும்பிப் பார்த்தான்.

"ஏன் நிற்கிறாய்? பொழுது போய்விட்டது. வா, சீக்கிரம் திரும்பிப் போகலாம்" என்று சாத்தனைத் துரிதப்படுத்தினான் நாகன்.

ஆனால் சாத்தனோ நின்ற இடத்திலேயே வேரூன்றிப் போய்விட்டான். அவன் தன் உணர்வை இழந்து அசையவும் சக்தி அற்றவன் ஆனான். விஷயத்தை அறிந்து கொள்வதற்கு அதிக நேரம் பிடிக்கவில்லை நாகனுக்கு.

"என்ன, அப்படிப் பார்க்கிறாய்?"

நாகன் கேட்ட கேள்விக்குச் சாத்தன் மறுமொழி ஒன்றும் கூறவில்லை. பல்லக்குச் சென்ற திசையையே உற்று நோக்கி நின்றுகொண்டிருந்தான்.

"அந்தப் பெண்ணைத் தெரியுமா, உனக்கு?"

நாகன் மறுபடியும் இவ்விதம் கேட்டவுடனேதான் சாத்தன் திரும்பிப் பார்த்தான். அந்தக் குரலிலே பரிகாசமும் கிண்டலும் கலந்து தொனிப்பதையும் அவன் உணர்ந்தான். அந்த விளையாட்டு அவனுக்குப் பிடிக்கவில்லை. அது அவன் உள்ளத்தை ஈட்டியால் குத்துவது போலத் துன்புறுத்தியது.

அவள் யார், எங்கு இருக்கிறாள் என்பனபோன்ற விஷயங்களை அறிய அவன் மனம் ஏங்கியது. அன்றி, தான் அவளை மறுபடியும் சந்திப்பானா, அவளுடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் தனக்குக் கிட்டுமா என்றெல்லாம் யோசித்தான் சாத்தன்.

சாலையுடன் போகும் பெண் ஒருத்தியைப் பார்த்து விட்டு, அவளைப்பற்றி ஒன்றுமே தெரியாமல தான் இப்படி இன்பக் கனவு காண்பது வீண் என்பது அவனுக்குத் தெரியாமல் இல்லை. அதனால் தன் உள்ளக் கிடக்கையை எளிதில வெளியிட்டுவிட்டதற்காகப் பெரிதும் வருந்தினான் அவன். ஆயினும், 'நீ அவளை மறுபடியும் கட்டாயம் காண்பாய்' என்று ஏதோ ஒன்று அவனை உறுத்திவந்தது.

யவனப் பெண்ணின் மையல் சாத்தனைப் பலமாகப் பற்றிக்கொண்டது என்பதை நாகன் நன்றாக அறிந்து கொண்டான். ஆனால் அது பின்னால் எவ்வளவு தூரத் தில் வந்து முடியும் என்பதை மட்டில் ஒருவரும் அப் போது அறியவில்லை.

அதுதான் சாத்தன் முதல்முதலாக அந்தோனியா வைப் பார்த்தது. அதே அந்தோனியா இப்போது தன் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பாள் என்பதை நினைவு படுத்திக்கொண்ட சாத்தனுக்கு உணர்ச்சி வேகம் வந்த தில் அதிசயம் என்ன?

# 3

## சந்திப்பு

"என்ன, எலுமிச்சம் பழத்தின் அளவு பெரியதாக இருக்கிறதே! இது அசல் முத்துத்தானா?"

"அப்படிச் சந்தேகப்படுவதற்குக் காரணம் என்ன? கொற்கைக்குப் பக்கத்தில் கடலில் குளித்து எடுத்தது. இதை விடப் பெரிய முத்துக்களும் எங்கள் நாட்டில் இருக்கின்றனவே!"

போண்டியஸுக்குத் தன் கண்களையே நம்ப முடிய வில்லை. அவன் அந்த முத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். வலது கையிலிருந்து இடது கைக்கும் பிறகு வலது கைக்குமாக அதை மாற்றி மாற்றித் தூக்கிப் பார்த்தான். அது ஒன்றே அவன் மனத்தைக் கவர்ந்தது.

"இந்த அழகிய சல்லாவைப் பாருங்கள். எவ்வளவு மெல்லியதாக நெய்திருக்கிறார்கள்? இதைப்போன்ற துணி எங்கள் நாட்டிலன்றி வேறு எந்தத் தேசத்திலும் கிடைக்காது. முப்பாக அகலம் கொண்ட இதைச் சுலப மாக ஒரு மோதிரத்துக்குள் நுழைத்துவிடலாம்."

சாத்தன் தான் கொணர்ந்திருந்த மற்றப் பொருள் களையும் இவ்விதமே ஒவ்வொன்றாகப் புகழ்ந்து கொண்டே போனான். ஆனால் போண்டியஸுக்கு அவை காதில் விழவே இல்லை. அந்த ஒற்றை முத்தையே அவன் நோக்கிக்கொண் டிருந்தான்.

அவன் மனம் எதையோ யோசித்து வந்தது. அந்த முத்தை நடுவில் வைத்து இரு புறங்களிலும் படிப்படி

யாக அளவில் குறையும் முத்துக்களைக் கோத்து ஏன் ஒரு மாலை கட்டக் கூடாது என்றே எண்ணினான். அப்படிப்பட்ட மாலை அந்தோனியாவின் சிவந்த நிறத்துக்கும் திறந்த கழுத்துக்கும் எவ்வளவு எடுப்பாக விளங்கும் என்பதைத் தன் மனக் கண்ணால் உருவாக்கிப் பார்த்தான் அவன்.

சாத்தனும் பழக்கத்தால், முடுக்கிவிட்ட யந்திரம் போல, தன் பொருள்களைப் புகழ்ந்துகொண்டு போனானே ஒழிய, தான் சொல்லி வந்த விஷயத்தைப் பற்றிக் கொஞ்சங்கூடச் சிந்திக்கவில்லை. அவன் கண்கள் அந்த அறையைச் சுற்றிச் சுற்றிச் சுழன்று எதையோ - இல்லை, யாரையோ - தேடிக்கொண்டிருந்தன. அவன் அந்தோனியாவைத்தான் அப்படித் தேடினான். அவள் அங்கே இல்லை. ஆயினும் அவள் எந்தச் சமயத்திலும் உள்ளே வரக்கூடும் என்பதை எண்ணி அவள் வரவை எதிர்நோக்கி ஏங்கியிருந்தான் சாத்தன்.

அவன் வாயும் கண்ணும் ஒன்றற்கொன்று சம்பந்தமில்லாமல் நடந்துகொண்டதைப் போலவே அவன் மனமும் வேறொன்றைப்பற்றிச் சிந்தித்துவந்தது. சென்ற வருஷத்தில் அந்தோனியாவுடன் கூடிக் கழித்த இன்ப நாட்களைப்பற்றிய கனவு கண்டுகொண்டிருந்தது.

அவன் முதல்முதலாக அவளைச் சந்தித்தபோதும் அப்படித்தானே எதிர்பாராத விதமாக இருந்தது?

சென்ற வருஷத்தில் சாத்தனும் நாகனும் அந்தோனியாவை நகர்ப்புறத்தே பார்த்த அன்றைத் தினம் அவர்கள் இறங்கியிருந்த விடுதிக்குத் திரும்பி வருகிற வரையில் அவர்கள் அவளைப்பற்றியே பேசிவந்தார்கள். நாகன்

அவளைப்பற்றி அநேக விஷயங்களைச் சாத்தனுக்குச் சொல்லிக்கொண்டே வந்தான்.

நாகனுக்கு அந்த நகரத்துப் பிரமுகர்கள எல்லோரையும் நன்றாகத் தெரியும். அது மட்டுமன்றி அவர்களில் ஒவ்வொருவருடைய வரலாறுகளையும் அவர்களுடைய விருப்பு வெறுப்புக்களையும் அவன் நன்றாக அறிவான்.

புரொகியூரேடராக, அதாவது ரோம் ஸாம்ராஜ்யத்தின் பிரதிநிதியாக, அலெக்ஜாந்திரியாவில் ஆளவந்த போண்டியஸைப்பற்றியும் அவன் குமாரத்தி அந்தோனியாவைப்பற்றியும் நாகன் கூறிவந்த விஷயங்களிலிருந்து சாத்தன் கிரகித்துக்கொண்டது அதிகமில்லை. சாதாரண வியாபாரியும் அந்நிய தேசத்தவனுமான தனக்கு அவளுடைய பழக்கம் கிட்டாது என்பதே அவன் தெரிந்துகொண்டது.

எட்டாப் பழத்தைக் குறித்து ஏங்குவதில் பயன் உண்டோ? அதனால் அவன் அந்தப் பெண்ணை அறவே மறக்க முயன்றுவந்தான். ஆனால் முடியவில்லை.

அவன் மன நிலை எப்படி இருந்தால் என்ன? எதற்காக அவன் தன் சொந்த நாட்டை விட்டு வேறு தேசம் வந்தானோ அந்தக் காரியத்தைக் கை விட்டுவிட முடியாதே!

அவன் வியாபாரத்துக்காக வந்தவன். தான் கொணர்ந்த சரக்குகளை அங்கு உள்ளவர்களுக்கு விற்பனை செய்து, பதிலுக்குத் தமிழ்நாட்டவர் விரும்பும் பண்டங்களைப் பெற்றுப் போக வேண்டும். வியாபாரத்தில் தீவிரமாக முனைந்து ஈடுபட்டால் ஒருகால் அவளைப்

பற்றிய நினைப்பை மறக்க முடியுமோ என்றும் எண்ணி னான் போலும்.

அவன் அதிக நாள் அங்கே தங்க முடியாது. மற்ற வர்களுடன் அவனும் ஊர் திரும்பிவிட வேண்டும். அவர் களுடைய பிரயாணமோ பருவக்காற்றைப் பொறுத்தது. காற்று அநுகூலமாக அடிக்கும் காலத்திலேயே ஊருக் குக் கிளம்பிவிடவேண்டும். காற்றின் திசை மாறிவிட் டால், படகுகள் கடலில் செல்ல மாட்டாமல் ஆட்டம் கொண்டு மூழ்கிவிடவும் நேரிடலாம்.

அன்றி, தான் கொணர்ந்த சரக்குகளை விற்பனை செய்யாமல் திரும்பிக் கொண்டுபோவதை விட வேறு அவமானம் உண்டோ? அவற்றை வாங்கக் கூடியவர்களை நாகனே நன்கு அறிவான். சாத்தன் அதனால் நாகன் துணையை நாடி நின்றான்.

இது சகஜமான சம்பவம். தங்கள் நாட்டை விட்டு வியாபாரத்துக்காக வேறு தேசங்களுக்குப் போவோர் தங்களுக்குள் ஒருவருக்கு ஒருவர் இவ்விதம் உதவி செய்து கொள்வது சாதாரணமானது. பல விதமான பாசங்களால் பிணைக்கப்பட்ட அவர்களிடையே இது இயற்கையுங்கூட.

நாகனும் இதை நன்கு அறிவான். அவன் அந்தத் துறையில் புகுந்த புதிதில் எத்தனையோ பேர்கள் அவ னுக்கு அப்படி உதவியிருக்கிறார்களே! ஆகவே அவனும் மறுநாள் சாத்தனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு அண்டியோகஸ் வீட்டுக்குப் போனான்.

அண்டியோகஸும் அந்த நகரத்துப் பிரமுகர்களில் ஒருவன்; பெரியபணக்காரன். அவன் தந்தை ரோம்ஸாம்

ராஜ்யத்தின் அதிபதிகளுள் ஒருவனாக இருந்து ஏராளமான பூமியும் பொருளும் சேர்த்து வைத்திருந்தான். அண்டியோகஸ் தந்தைக்கு ஒரே பிள்ளை. அதனோடு நல்ல இளம் வயசு; காளைப் பருவம் வாய்ந்தவன். அடிமைகளை அதட்டி வேலை வாங்கி நிலங்களைப் பயிர் செய்து, பிதிராஜிதத்தைக் கொண்டு காலங் கழித்துவந்தவன்.

சைனியத்தின் தலைமைப் பதவி ஒன்றும் அவனுக்கு இருந்துவந்தது. ஆயினும் அவன் கொஞ்ச காலமாகப் போர்க்களங்களுக்குப் போகவில்லை. தலைமுறை தலைமுறையாகப் பெரும் புகழும் கிட்டிவிட்டன. அவன் கீழ்க் கைகட்டிச் சேவகம் புரியும் வேலைக்காரர்களும் அடிமைகளும் பலர் இருந்தனர். அப்படி இருக்க அவன் தன் மெய்வருந்த வேலைசெய்யும் அவசியம் ஏற்படவில்லை. சுகஜீவனம் செய்துவந்தான்.

அந்தக் காலத்திலே ரோம் ஸாம்ராஜ்யத்தைப் பற்றிக்கொண்டிருந்த மோகம் அவனையும் பிடித்திருந்தது. அந்த மோகத்துக்கு அவனையே முதல் அடிமை என்றும் கூறலாம். கவலையில்லா வாழ்க்கையை நடத்திய அவனுக்கு, விலையுயர்ந்த, கிடைத்தற்கரிய பொருள்களைச் சம்பாதித்துச் சேமித்து வைப்பதில் ஆசை உண்டானது இயற்கையே.

நாகனும் சாத்தனும் கொணர்ந்திருந்த சாமான்களை ஒவ்வொன்றாகப் பார்த்து மகிழ்ந்தான் அண்டியோகஸ். எதைப் பார்த்தாலும் அதை வாங்க வேண்டும் என்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. ஆனால் அவனோ எதை வாங்குவது என்று அறியாமல் திகைத்தான்.

"அந்தத் தந்த யானை வெகு நேர்த்தியாக இருக்கி

றதே!" என்று கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தாள் ஒரு பெண்.

"யார், அந்தோனியாவா? நல்ல சமயத்தில்தான் வந்தாய். வா, இவற்றைப் பார். எது உனக்குப் பிடித்திருக்கிறது, சொல், பார்ப்போம்" என்று உள்ளப் பூரிப்புடன் சொன்னான் அண்டியோகஸ்.

அந்தோனியா மிக்க கம்பீரத்துடன் அந்த விசாலமான அறையிலே நுழைந்து அண்டியோகஸின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். அந்த அறையைச் சுற்றி ஒரு தரம் தன் பார்வையைச் செலுத்தினாள். பிறகு மெதுவாக அந்தத் தந்த யானையைக் கையில் எடுத்துக் கொண்டாள். ஆனால் அவள் பார்வையோ அந்த யானையை நோக்கியதாக இல்லை; எதிரில் உட்கார்ந்திருந்த இளந் தமிழன் சாத்தனைக் குறித்ததாகவே இருந்தது.

சாத்தனுக்கு உடல் வெலவெலத்துவிட்டது. அவன் இருதயத்தை யாரோ கனமான பாறையைக் கொண்டு அமுக்குவதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. தன் எதிரில் உட்கார்ந்திருக்கும் அந்த யவனப் பெண்ணைப் பார்த்தான். அவள் அழகைப் பருக ஏங்கியது அவன் உள்ளம்.

ஆனால் அவளை ஏறிட்டுப் பார்க்க அவனால் முடியவில்லை; தலை குனிந்து உட்கார்ந்திருக்கவும் கூடவில்லை.

அவன் தொண்டை வறண்டு போயிற்று. உதடுகளைச் சேர்த்து நாக்கைக் கூட்டி உமிழ்நீரை விழுங்கித் தொண்டையை நனைத்துக்கொள்வதும், இடையிடையே தலை நிமிர்ந்து கடைக்கண்ணால் அவளைப் பார்ப்பதுமாகப் பொழுதைக் கழித்தான்.

அவன் நிலை கவிழ்ந்துவிட்டது. யாரைப் பார்க்கப் பயந்தானோ, யாரை மறக்க முயன்றானோ, அவளே எதிரில்

வந்து உட்கார்ந்து அவனையே கூர்ந்து கவனித்தாள். தெய்வம் தன்னை இப்படியும் சோதிக்க வேண்டுமா என்ற ஏக்கத்துடன் கல்லாய்ச் சமைந்துவிட்டான் அவன்.

அன்றைத் தினம் வியாபாரம் முழுவதையும் நாகனே பார்த்துக்கொண்டான். சாத்தன் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை. ஆயினும், நாகனே எதையும் தன் இஷ்டப்படி செய்துவிடவில்லை. எந்தப் பண்டத்தையும் விலை கூறுவதற்கு முன் சாத்தனைக் கேட்டு அவன் அபிப்பிராயத்தை அறிந்துகொண்டே விலை பேசினான்.

சாத்தனுடைய மௌன நிலையே அந்தோனியாவை அவனிடம் இழுத்தது. அவள் தன் கண்களைச் சாத்தனை விட்டு எடுக்கவே இல்லை. அவனும் நாகனைப் போல வாய் திறந்து பேசி வியாபாரத்தை நடத்தி இருந்தானாகில் அவள் அவனைப்பற்றி அதிகமாகக் கவனித்திருக்க மாட்டாள் போலும்.

கடைசியில் நாகனும் சாத்தனும் விடை பெற்றுக் கொண்டு எழுந்தார்கள்.

“இவர் யார்? நீங்கள் ஏன் நம் மாளிகைக்கு வரவில்லை? நாளைக்காவது வாருங்கள்.”

அந்தோனியா இவ்விதம் சொன்ன வார்த்தை கூரிய ஈட்டி போலச் சாத்தன் மார்பில் தாக்கியது. ஏற்ற பதில் சொல்ல அவனால் முடியவில்லை.

“இல்லை..” என்று எதையோ சொல்லி மழுப்ப வாய் எடுத்தான்.

நாகனோ நல்ல பயிற்சி உள்ளவன்; பேசுவதில் சமர்த்தன்.

“அவ்விடத்துச் சௌகரியம் பார்த்து வரவேண்டும் என்று இருந்தோம். தாங்கள் சொல்லிவிட்டால்

போதும் நாளைத் தினம் கட்டாயம் வருகிறோம்" என்று சட்டென்று பதில் அளித்துவிட்டான்.

சாத்தன் நடந்துகொண்ட விதத்தைப்பற்றி அன்று முழுதும் நாகன் செய்த பரிகாசத்துக்கு அளவே இல்லை. சாத்தன் என்ன மறுமொழி சொல்ல முடியும்? தன் மனக்கிளர்ச்சியை மறைக்கப் பார்த்தான். ஆனால் முடிய வில்லை. பீறிக்கொண்டு அது வெளிவந்து தோற்றம் அளித்தது.

மறுநாள் சாத்தன் புரோகியூரேட்டர் மாளிகைக்குச் சென்றான். அதற்குத் தூண்டுகோல் வேறு வேண்டி யிருக்கவில்லை. நாகனும் உடன் சென்றான். சாத்தனுக்கு முதல் நாள் இருந்த லஜ்ஜை சிறிது குறைந்தது. அந் தோனியாவைப் பார்த்தபோது அவ்வளவு பரபரப்பும் உண்டாகவில்லை. கோழைத்தனத்தை உதறித் தள்ளிச் சகஜமாகப் போண்டியஸோடனும் அந்தோனியாவுடனும் பழகினான்.

அன்றைக்கு அவன் புரோகியூரேடர் மாளிகையில் ஒரு ஜாம நேரம் இருந்தான். பொழுது போனதே தெரியவில்லை. உல்லாஸப் பேச்சுகளுக்கு நடு நடுவிலே திராக்ஷைப் பழ ரஸமும் சிற்றுண்டிகளும் வந்து கொண்டே இருந்தன. அந்தோனியா அவற்றை எடுத் துப் பரிமாறினாள். அதுகாறும் தனக்குக் கிடைக்காத பாக்கியம் அப்போது கிட்டியதாகவே கருதினான் சாத்தன்.

முதற் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. அப்பால் அவ னுக்கு அங்கே போய்வருவதில் கஷ்டம் இல்லை. அவர்க ளும் சாத்தனை அடிக்கடி வந்து போகும்படி கேட்டுக் கொண்டே இருந்தார்கள். அவனுக்கும் ஏதாவது காரி

யங்கள் முளைத்துக்கொண்டே இருந்தன. ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என்ற நோக்கம் இருக்கும் போது அதற்குக் காரணங்களைச் சிருஷ்டிப்பது ஒரு பெரிய காரியமா?

அந்தோனியாவும் சாத்தனும் ஒருவரை மற்றவர் நன்ருக அறிந்துகொண்டனர்; நெருங்கிப் பழகிஞர்கள். ஒருவருடைய விருப்பு வெறுப்புக்களை மற்றவர் நன்கு அறிந்துவிட்டார்கள். நாளடைவில் அந்தப் பழக்கம் காதலாக மிளிர ஆரம்பித்தது.

சென்ற வருஷத்தில் நடந்த சம்பவம் இது. அதை நினைத்து நினைத்து உள்ளம் மகிழ்ந்திருந்தான் சாத்தன். அவளுடைய உருவம் அவன் மனக்கண் முன்னுல் சதா தோன்றிக்கொண்டே இருந்தது. தான் மறுபடியும் யவன தேசத்தை அடைந்து அவளைக் காணப்போகும் வேளையையே அவன் எதிர்நோக்கித் துடித்துக்கொண்டிருந்தான். அதனை மறந்து வாழ அவனுல முடியவில்லை.

இவ்விதம் தன் மனத்திலே நிரந்தரமான ஓர் இடத்தைப் பெற்றுவிட்ட அந்தோனியாவைப் பார்ப்பதற்காக ஓடோடியும் வந்தான். ஆனுல அவன் எவ்வளவு ஆவலுடன் வந்தானே அவ்வளவு ஏமாற்றமும் அடைந்தான். அவனது ஆசை நிராசையாயிற்று. அதிக நேரம் அங்கே தாமதித்துப் பார்த்தான். அந்தோனியா வரவில்லை.

நாழிகையும் ஆகிவிட்டது. அதற்கு மேல் அவன் போண்டியஸ் மாளிகையில தங்குவதற்கு முடியுமா? அவ்விதம் தங்குவது வம்புப் பேச்சுக்கு இடமாகுமே. ஆகவே சாத்தன் வேறு வழியில்லாமல் கடைசியில் வீடு வந்து சேர்ந்தான்.

# 4

# ஏமாற்றம்

நள்ளிரவாகியும் சாத்தன் தூங்கவில்லை. அவன் படுக்கையிலே புரண்டு புரண்டு படுத்துப் பார்த்தான். தூக்கம் வந்தால்தானே?

அவன் மனத்தே எண்ணங்கள் உண்டாகிப் புழுங்கின. பகலில் நிகழ்ந்த சம்பவங்களை நினைத்துப் பார்த்தான். அவன் உள்ளத்தே எழுந்த உணர்ச்சி வேகத்தாலேயே அவனுக்கு நித்திரை ஏற்படவில்லை.

'அந்தோனியாவைக் காணவில்லையே! நம்மை வரவேற்க அவள் ஏன் வரவில்லை? எங்கேயாவது வெளியில் போயிருப்பாளா? ஒருகால், அவளுக்கு ஏதாவது......?' மேலே யோசிக்க அவன் மனம் மறுத்துவிட்டது.

சாத்தன் அந்த யவனப் பெண்ணைப் பார்த்து ஒரு வருஷ காலத்துக்கு மேல் ஆகவில்லை.

ஒருகால் அண்டியோகஸ் அவளை அழைத்துச் சென்றிருப்பானோ? அவன் அந்தோனியாவின் மீது ஒரு கண் வைத்திருந்தான் என்பதைச் சாத்தன் அறிவான். அவன் அவளைச் சுற்றிச் சுற்றி அலைந்துகொண்டிருந்தான். அப்படியானால் அவளும் அவனை நேசிக்கிறாளா? சாத்தன் ஊரில் இல்லாத காலத்தில் அவளுக்கு மனமாறுதல் ஏற்பட்டுவிட்டதா?

சாத்தன் உள்ளத்தே பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்தது. நாழிகையும் ஆகிவிட்டது. ஆயினும் தான் செய்த பிழையை அவன் உணரவில்லை.

வழக்கமாகத் தமிழ்நாட்டு வணிகர்கள் யவன தேசத்துக்கு வந்து சேரும் காலம் இன்னும் கிட்டவில்லை. இந்த வருஷம் காற்றுத் திசை மாறி அடிக்க ஆரம்பித்தவுடனேயே அவன் புறப்பட்டுவிட்டான். தவிர, வழியிலும் மாலுமிகளைச் சதா தூண்டி, அவர்களுக்குக் கொஞ்சமும் ஓய்வு கொடுக்காமல் படகுகளைச் செலுத்தி வரச் செய்தான். அதனால் ஒவ்வொரு வருஷமும் அவர்கள் அலெக்ஜாந்திரியா வந்து சேரும் காலத்துக்கு ஒரு வாரம் முன்னதாகவே சாத்தன் வந்து சேர்ந்துவிட்டான்.

அன்றி, தமிழ்நாட்டு வணிகர்கள் யவன தேசத்துக்கு வந்த அன்றைத் தினமே தங்கள் வியாபாரத்துக்குக் கிளம்பிவிட மாட்டார்கள். நாலைந்து தினங்கள் தங்கள் இருப்பிடத்திலேயே தங்கிச் சிரம பரிகாரம் செய்து கொள்வார்கள். அதற்குள்ளாக, அவர்கள் வந்துள்ள செய்தி நகரத்துள் நன்றாகப் பரவிவிடும். அதை அறிந்த அந் நகரத்துத் தரகர்கள், வெளிநாட்டு வியாபாரிகளைத் தேடி வருவார்கள். எந்த எந்த இடங்களுக்குச் சென்று விலை பேசினால் நல்ல லாபம் கிடைக்கும் என்பதைக் கலந்து ஆலோசிப்பார்கள். அப்பால ஒரு நாள் பார்த்துப் புரொகியூரேடரின் சௌகரியத்தை அறிந்து அவரை நேரில கண்டு காணிக்கைகளை - இல்லை, பரிசுகளை - ச் செலுத்தித் தங்கள் தொழிலை அரங்கேற்றம் செய்வார்கள்.

இந்தத் தடவை சாத்தன் அத்தகைய சம்பிரதாயங்களைப் பின்பற்றவில்லை. தோணியிலிருந்து இறங்கியவுடனே வேறு வேலை பார்க்காமல் அவன் நேராகப் போண்டியாஸ் மாளிகைக்கு வந்துவிட்டான். அவன் மனத்தில் இருந்த துடிதுடிப்பை யார் அறிவார்?

அந்தோனியா அவ்விடம் இருந்தாலன்றோ சாத்தன் அவளைப் பார்க்க முடியும்? அவளுக்காகக் காத்துக் காத்துப் பார்த்தான். அதற்கு மேல் அவன் போணடியஸ் மாளிகையில் தங்குவதற்கு முடியுமா? சில சமயங்களில் அசம்பாவிதமாகவும் போய்விடக் கூடும். வேறு வழியில்லாமல் அவன் கடைசியில் வீடு வந்து சேர்ந்தான். அந்த ஏமாற்றத்தாலே ஏக்கம் அடைந்த அவனுக்கு எப்படித் தூக்கம் பிறக்கும்?

அந்தோனியா உண்மையில் அன்றைக்கு அணடியோகஸுடன் பக்கத்தே கொஞ்ச தூரத்தில் இருந்த சிங்காரத் தோட்டத்துக்குப் போயிருந்தாள். ஆயினும் அவள் சாத்தனை மறந்துவிடவில்லை. அவனைக் காணப் போகும் நாளைக் கணக்கிட்டுக்கொண்டுதான் இருந்தாள்.

காற்று நன்றாக அடித்த விஷயம் அவளுக்குத் தெரியுமா? பழக்கத்துக்கு மாறாகத் தமிழ்நாட்டு வணிகர்கள் இந்த வருஷம் சீக்கிரம் வந்துவிட்டார்கள். இதனை அறியாமலே அவள் அண்டியோகஸுடன் போயிருந்தாள்.

அவர்கள் வந்த செய்தியைக் கேட்டவுடன் அந்தோனியா, அண்டியோகஸ் ஆகிய இருவரும் இருவேறு விதமான உணர்ச்சிகளை அடைந்தனர். அந்தோனியா சந்தோஷத்தால் உள்ளம் மலர்ந்து ஆனந்தக் கூத்தாடினாள். அணடியோகஸோ மனம் வெதும்பி வாடி உலர்ந்துவிட்டான்.

அவன் சாத்தனைத் தன் விரோதியாகவே கருதிவந்தான். சென்ற வருஷம் சாத்தன் வியாபாரத்துக்காக அவ்விடம் வந்தது முதலே அந்தோனியாவின் நடத்தையில் மாறுதல் ஏற்பட்டுவிட்டது. அதுவரையில் அவள்

அநேகமாக ஒவ்வொரு நாளும் மாலைப் பொழுதை அண்டியோகஸுடன் சேர்ந்து வம்புப் பேச்சுப் பேசி இன்பமாகக் கழிப்பாள். ஆனால் சாத்தன் வந்த பிறகோ அவளைக் காண்பதே துர்லபமாகப் போய்விட்டது. அவள் சதா தமிழ்நாட்டு வியாபாரிகள் தங்கியிருந்த இடத்தைச் சுற்றிவர ஆரம்பித்துவிட்டாள்.

இதை ஆரம்பத்திலிருந்தே கவனித்துவந்த அண்டியோகஸுக்கு உள்ளம் கொதித்தது. எனினும் அவன் அதை எப்படித் தடுக்கமுடியும்? அந்தோனியாவின் நடமாட்டத்தைக் கட்டுப்படுத்த அவனுக்கு என்ன உரிமை?

தான் அந்தோனியாவை மணக்கவேண்டும் என்று நீண்ட நாளாக விரும்பியிருந்தான் அண்டியோகஸ். அவன் வேட்கையை அவள் மட்டுமேயன்றி, போண்டியஸும் மற்றும் பலரும் அறிவார்கள். அந்தச் சம்பந்தம் பொருத்தமானதே. பிரமாதமான குற்றம் ஒன்றும் இல்லை. ஆகையால் அவர்கள் யாவரும் அதை ஒருமுகமாக வரவேற்றார்கள்.

அந்தோனியா மட்டும் தன் உள்ளக் கிடக்கையைச் சுலபமாக வெளியிடவில்லை. அவள் அண்டியோகஸுடன் நெருங்கிப் பழகிவந்தது உண்மைதான். எனினும் அவள் மனம் பூர்ணமாக மயக்கம் கொள்ளவில்லை. அவன்பால அவளுக்கு ஏதோ ஒரு வகையான கவர்ச்சி இருந்ததேயல்லாமல், அது நிறைந்த காதலாக மாறவில்லை. இதை அண்டியோகஸும் உணர்வான். ஆனால் நாளாக ஆக அது சரிப்பட்டுவிடும் என்றே இரு தரத்தாரும் நினைத்திருந்தனர்.

ஆனால் சாத்தனுடன் பரிசயம் ஏற்பட்ட பிறகு அந்தோனியாவின் போக்கில் உண்டான மாறுதல்களைக்

கவனித்தபோது உண்மையிலேயே அவன் மனசு முறிந்துவிட்டது. அவன் மனமாரச் சாத்தனைப் பகைத்தான்.

தாங்கள் தெய்வப் பிறவியை அடைந்தவர்கள் என்றார், உலகத்திலே மனிதர்களாகப் பிறந்த மற்றையோர் தங்களுக்கு அடிமைகளாக வாழ வேண்டியவர்கள் என்றும் ரோம் ஸாம்ராஜ்யத்தை நிர்வகித்தவர்கள் தீவிரமாக நம்பிவந்தார்கள். இதே கொள்கையுடன்தான் அவர்கள் ராஜ்ய பாலனத்தை நடத்தி வந்தார்களாதலால், ஏழை முதல் பணக்காரர் வரையில் எல்லோருக்கும் இந்த இறுமாப்பு இருந்தது. அமாடியோகஸுக்கும் இது ரத்தத்திலேயே ஊறிக் கிடந்தது. அதனாலே அவன் கோபம் அதிகமாகியது. சாத்தன் வராமல் இருந்திருந்தால் அந்தோனியா தன் மனத்தில் எவ்வித மாறுதலும் இன்றி, தன்னைக் காதலித்திருப்பாள் என்றே அவன் உறுதியாக நம்பினான்.

'ஒருகால் சாத்தன் இந்த வருஷம் வராமல் இருக்கலாகாதா? ஏன், இடைக் காலத்தில் அவனுக்கு இடையூறு ஏதேனும் ஏற்பட்டிருக்கலாமன்றோ?' தண்ணீரில் மூழ்கி இறக்கும் தறுவாயில் இருப்பவன் ஏது கிடைத்தாலும் அதைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு தன் உயிரைக் காப்பாற்ற முயலுவான். அதே நிலையிலேதான் இருந்தான் அமாடியோகஸ். தனக்கு இருந்த வேகத்தில் சாத்தன் திரும்பவும் யவனதேசம் வர முடியாதபடி அவனுக்கு ஏதேனும் விபத்து நேரிடலாகாதா என்றே விரும்பினான். இவ்விதம் எண்ணித் தன் மனத்தைச் சமாதானம் செய்துகொண்டாலும், அவனையும் அறியாமல் அவனுக்கு ஏதோ ஓர் ஏக்கம்-நடுக்கம்-ஏற்பட்டிருந்தது. சாத்தன் நிச்சயமாக வந்துவிட்டான் என்று

யாரோ தன் காதுகளில் உரைத்ததுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது அண்டியோகஸுக்கு.

அந்தோனியா விரைவாகத் தன் மாளிகையை அடைந்தாள். ஆயினும், அவள் பயப்பட்டபடியே நேர்ந்து விட்டது. சாத்தன் அதற்கு முன்னமே வந்து போய்விட்டான். தன்னைக் காணுமல் அவர் என்ன நினைத்துக்கொண்டாரோ என்றே கவலைப்பட்டாள். அன்றி, 'அண்டியோகஸுடன் நான் சென்றிருந்த விஷயத்தை அவர் அறிந்திருப்பாரோ! அதனுல் கோபித்துக்கொள்வாரோ!' என்றும் ஏங்கினுள்.

அவரை மறுபடியும் கண்டு தன் நிலைமையை விளக்கிக் கூறி மன்னிப்பைப் பெறும் வரையில் அவளுக்கு மன நிம்மதி ஏற்படுமா?

# 5
# உள்ளக் கொதிப்பு

"அண்ணு, அதோ தெருவோடு போகிறுளே, அவள் உடுத்திருக்கும் சேலையைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாக இருக்கிறது?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தாள், கரோலிஞ.

அவள் அண்டியோகஸின் தங்கை. அவள் சொல்லு வதற்கு முன்னமேயே அண்டியோகஸ் அந்தப் பெண் ணைப் பார்த்துவிட்டான். அவள் உயர்ந்த மஸ்லின் துணி ஒன்றை அணிந்திருந்தாள். மிகவும் மெல்லிய நூலால் நெய்யப்பட்ட அந்தத் துணி, உடுப்பவர் உடலு டன் நன்ருக இசைந்து வேறுபாடே இல்லாமல் தோன் றும். அம்மாதிரியே அது அந்தப் பெண்ணின் உடல அழகை நன்ருக எடுத்துக் காட்டியது.

அழகு உள்ளவர்கள் தங்கள் ரூபலாவண்யத்தை மறைத்து வைக்கமாட்டார்கள். அதை வெளியே எடுத் துக் காட்டிப் பிறர் அதைக் கண்டு மகிழ்வதில் அவர் களுக்கும் ஒரு திருப்தி உண்டாகும். இது மனித சமூகத்தின் மனோ தாமம். அதேபோல அந்தப் பெண்-ணும், அவள் மிக்க எழில் வாய்ந்தவள் - தன் அழகைப் பிறர் பார்த்து மயங்குவதில் ஓர் ஆனந்தம் அடைந்து பெருமிதத்துடன் நடந்து சென்ருள்.

அந்தக் காட்சி அண்டியோகஸ் மனத்தே துன்ப உணர்ச்சிகள் பலவற்றை எழுப்பிவிட்டது; அடங்கிக் கிடந்த நெருப்பைக் கிளறிவிட்டது. அது கொழுந்து விட்டு ஜ்வாலையுடன் எரிய ஆரம்பித்தது.

தன் தங்கை எதற்காகத் தன்னிடம் அந்தச் சல்லாத் துணியைப்பற்றிக் கேட்டாள் என்பதை அண்டியோகஸ் வெகு சீக்கிரத்தில் அறிந்துகொண்டான். அந்த மாதிரித் துணி ஒன்று தனக்கு வேண்டும் என்று அவள் அவனை நீண்ட காலமாகக் கேட்டுவந்தாள். சென்ற வருஷம் அவன் அந்தோனியாவுக்கு ஒன்று வாங்கிக் கொடுத்தானே, அது முதலாகத்தான். கரோலினாவுக்கும் ஒன்று வாங்கிக் கொடுக்கலாம் என்றுதான் அவன் ஒரு சமயம் எண்ணியிருந்தான்.

ஆனால் இப்போதோ அந்த யோசனை உண்டாகவே போவதில்லை. அந்தத் துணியைப் பற்றிய பேச்சே அவனுக்கு வெறுப்பாக இருந்தது.

“சேச்சே, புத்தி போயிற்றே உனக்கு!” என்று தன் தங்கையைப் பார்த்து எரிந்து விழுந்தான் அவன்.

அதைக் கேட்டவுடன் கரோலினா திடுக்கிட்டாள். அதனால் அவள், “என்ன, அண்ணா?” என்று கேட்டாள்.

“தெருப் பெண்களும் குலமகளிரும் கட்டிக்கொள்ளத் தகுதி வாய்ந்த துணியா அது? மானத்தை விலை பேசி, உடலை விற்று வாழும் பெண்கள் தங்கள் தேக சௌந்தரியத்தைப் பிரகாசிக்கச் செய்வதற்காக உபயோகிக்கும் சல்லாவன்றோ அது!”

இவ்வளவு கொடூரமான சொற்களைத் தன் அண்ணனிடமிருந்து எதிர்பார்க்கவில்லை, கரோலினா. இதைக் கேட்டவுடன் அவளுக்குப் பொறுக்கவில்லை. துக்கம் தொண்டையை அடைத்துப் பேச முடியாமல் திணற அடித்தது. அவள் உடலிலும் ஒரு படபடப்பு ஏற்பட்டது. அப்படிப்பட்ட மெல்லிய சல்லாத் துணியைத் தனக்கு வாங்கிக் கொடுக்கமாட்டேன் என்று சொல்லுவதுடன்

நில்லாமல், அவ்விதம் கேட்டதற்காகத் தன்னைக் கடிந்து கொள்வதைக் கண்டதும் அவளுக்குக் கோபம், துக்கம், ஆத்திரம், அழுகை முதலிய எல்லாம் கலந்து வந்தன.

"ஆமாம், நான் கேட்டால்தான் இப்படி. போன வருஷம் அந்தோனியாவுக்கு வாங்கிக் கொடுத்தாயே? அவள் யார்? குடும்பப் பெண்ணு, பரத்தையா? இல்லா விட்டால் அவள் உடுத்துகொள்ளலாம். ஏனென்றால், புரொகியூரேடா பெண்; நீ அவளைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினாய். இப்போது தெரிந்தது உன் மனத்தில் உள்ள நினைப்பு."

ஆத்திரத்துடன் இதைச் சொல்லிவிட்டு அவள் அந்த இடத்தில் நிற்கவில்லை; விடு விடென்று வீட்டி னுள்ளே போய்விட்டாள்.

அண்டியோகஸ் எந்த விஷயத்தை மறக்க முயன் றானோ அது அவன் முன்னே வந்து நின்றுவிட்டது. அவன் அந்த மஸ்லின் துணியை அந்தத் தமிழன் சாத்த னிடமிருந்து விலைக்குப் பெற்று அந்தோனியாவுக்குப் பரிசாக அளித்த அந்த நாளை அண்டியோகஸ் என்றைக் கும் மறக்க முடியாது.

அந்தோனியா அந்த மஸ்லினை உடுத்து வந்த வுடனே, அவன் தன் கண்ணால் கண்டதையே நம்ப வில்லை. அவள் அழகு அப்படிச் சோபித்தது. அந் தோனியாவை அந்த அலங்காரத்தில் பார்த்து மயங்காத வர்களே இல்லை. சாத்தனுக்கும் அது புது அநுபவமாக இருந்தது. அவளையே இமை கொட்டாமல் பார்த்தான். அதைக் கவனித்த அந்தோனியாவுக்குச் சிறிது வெட்கம் உண்டாயிற்று; நாணித் தலை கவிழ்ந்துகொண்டாள். சாத்தனும் தன் திகைப்பை மறைக்க முயன்றான். ஆனால்

முடியாமல் திணறினான். அண்டியோகஸோ கண்களில் கோபக் கனல் கொழுந்து விடச் சுட்டெரித்து விடுவதே போலச் சாத்தனைப் பார்த்தான்.

அந்தத் துணியே தனக்குச் சத்துருவாகப் போய் விடும் என்பதை அவன் அறியான். 'நாம் எதற்காக அந்தத் துணியைச் சாத்தனிடமிருந்து வாங்கினோம்? அப்படித்தான் வாங்கினாலும் அதை அந்தத் தமிழனிட மிருந்து பெற்றதாக அந்தோனியாவிடம் ஏன் சொன் னோம்?' என்றெல்லாம் தன்னைத் தானே நொந்துகொண் டான் அவன்.

அந்தோனியா இவ்விதம் செய்வாள் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. அவள் அந்தத் தமிழன் சாத்தனுடன் ஓடிவிட்டாள். அது நிகழ்ந்து பதினைந்து தினங்கள் ஆகிவிட்டன எனினும் அவனுக்கு அதுவரை யில் தெரியாது. அவன் காதுகளுக்கு எட்டக் கூடாது என்று ரகசியமாக ஒளித்து வைக்கப்பட் டிருந்ததா? எப்படியோ, முதல் நாள் இரவுதான் அதனை அறிந்தான் அவன்.

அப்பால் அவன் தூங்கவே இல்லை. ஏக்கமே உரு வெடுத்தவன்போல் அங்குமிங்கும் அலைந்தான். படுக்கை யில் படுத்தால் பழைய ஞாபகங்கள் ஒவ்வொன்றாக அவன் மனக் கண்முன் எழுந்தன. அந்தோனியாவின் மனத்தைக் குளிர வைக்க - ஆம், அவளைத் தன் வசப் படுத்த - அவன் என்ன என்ன சாமான்களை அவளுக்கு வாங்கிக் கொடுத்திருந்தான்! தந்தச் சீப்பு, ஸ்படிகக் கண்ணாடி, மஸ்லின் புடைவை. பட்டுத் துணி, சந்தனக் கட்டை, அகில் முதலிய வாசனைச் சரக்குகள் இன்னும் விளையாட்டுச் சாமான்கள் எவ்வளவோ? ஒவ்வொன்றை

யும் யானை விலை, குதிரை விலை கொடுத்து வாங்கவேண்டி யிருந்தது. ஆம், அவன் சொத்தில் பாதிக்கு மேல் அப்படி அழிந்து போய்விட்டதே!

அவ்வளவு செய்தும், அவள் அண்டியோகஸிடம் நன்றி பாராட்டினளா? இல்லை. அம்மட்டிலோ? தன்னுடைய அந்தஸ்து, மரியாதை, குலப் பெருமை முதலியவற்றைக் கவனிக்கவில்லையே! அவள் எல்லாவற்றையும் துறந்து ஊர் பேர் தெரியாத அந்த நாடோடி வியாபாரியான யாரோ ஒருவனுடன் ஓடிவிட்டாளே. விழலுக்கு இறைத்த நீராக அன்றோ போயிற்று, அவன் வாரி இறைத்த பணம் முழுதும்?

அந்தோனியாவை இழந்ததைக் காட்டிலும், தன் பொருளை இழந்த துக்கமே அண்டியோகஸை அதிகமாக வாட்டியது போலும்! வீண் விரயம் செய்யாமல் சேர்த்து வைத்திருந்தால், அந்தப் பணம் இப்போது எவ்வளவு அதிகமாக இருந்திருக்கும் என்பதை எண்ணியே மறுகியது அவன் உள்ளம்.

அந்தோனியாவின் நடத்தையால அவமானம் அடைந்தவர்கள் அவன் மட்டும் அன்று; வேறு சிலரும் இருந்தனர். அவளுடைய தந்தையைத்தான் எடுத்துக் கொள்ளலாமே. போனாடியஸின் செல்வாக்குச் சூழும் பதவிக்கும் அது ஓர் அழியாக் கறையாகவே போய் விடவில்லையா? அன்றி, ரோம் ஸாம்ராஜ்யத்துப் புரொகியூரேடரின் பெண் ஒருத்தியைப் பரதேசி ஒருவன் அடித்துக்கொண்டு ஓடிவிட்டான் என்றால் அது அவர்கள் சமூகத்துக்கே இழுக்காகாதா?

எனினும் அவன் ஒன்றும் செய்ய முடியாத நிலையில் அகப்பட்டுக்கொண்டான். தன் படகுகளை மிதக்கவிட்டு,

உதவிக்குத் தேவையான போர்வீரர்களையும் அழைத்துக்கொண்டு அவர்களைத் துரத்திச் சென்று மடக்கி அவளைப் பிடித்துக்கொண்டு வரவும் முடியாத நிலைமையில் இருந்தான். அவர்கள் புறப்பட்டுப் பதினைந்து தினங்கள் ஆகிவிட்டனவே. அதற்குள் அவர்கள் பாதி வழிக்குமேல் போயிருப்பார்களே!

ஒருகால் வழியில் ஏதாவது தெய்வச் செயலால் அவர்கள் பிரயாணம் தடைப்பட்டு இருக்கலாகாதா என்ற சபலத்துடன் முயன்று பார்க்கலாம் என்றாலும் காற்றுத் திசை மாறிவிட்டது. எதிர்காற்றில் தோணிகளைத் தமிழ்நாட்டுப் பாதையில் செலுத்த முடியாது. இயற்கையின் மாறுபாட்டை - மறுபடியும் நல்ல காற்று வரப்போகும் நாளை - எதிர்பார்த்து, குறைந்தது ஆறு மாச காலமாவது அவன் காத்திருக்க வேண்டியதுதான். வேறு வழி இல்லை.

யவன மக்கள் தவறு இழைக்க மாட்டார்கள். ரோம் ஸாம்ராஜ்யத்தைச் சார்ந்தோர் யாவரும் இதனைத் திடமாக நம்பி வந்தார்கள். அதனால், அந்தோனியா இழைத்த பிழைக்குச் சாத்தனே பொறுப்பாளி என்று அண்டியோகஸ் நிச்சயமாக எண்ணினான். அவளைக் குறை கூற அவன் மனம் ஒருப்படவில்லை. சாத்தனையே நிந்திக்கத் துவங்கினான்.

சாத்தன் மீது ஏற்பட்ட கோபம் படிப்படியாக அதிகரித்தது. எல்லையைத் தாண்டித் தமிழர்கள்மீது பாய்ந்தது. தனிப்பட்ட ஒருவன் செயலுக்கு அவனை ஈன்ற சமூகம் பொறுப்பேற்க வேண்டுமா?

'தமிழ்ப் பூண்டே இல்லாமல் செய்துவிட வேண்டும்' என்று தீர்மானித்த அண்டியோகஸ் அதை முடிப்

பதற்கான வழிகளைத் தேட ஆரம்பித்தான். தமிழ்நாட்டு வியாபாரிகளைப் பற்றிய விஷமமான செய்திகளை மக்களிடையே பரப்பத் தலைப்பட்டான்.

அலெக்ஜாந்திரியா ரோம் ஸாம்ராஜ்யத்தின் முக்கியமான நகரங்களுள் ஒன்றாகத்தான் இருந்தது. ஆயினும் நாட்டின் நிர்வாகத்தை ஆட்டி வைத்தவர்கள் ரோமாபுரியிலே வசித்து வந்தார்கள். வெளியூர்களில் இருப்பவர்கள் புதிய யோசனை எதைச் சொன்னாலும் தலை நகரத்திலிருந்து அங்கீகாரம் வராவிட்டால் அது முடிகிற காரியமாகுமா?

அண்டியோகஸ் அலெக்ஜாந்திரியாவை விட்டு ரோம் நகரத்துக்குச் சென்றான். அங்கே இருந்த ஸாம்ராஜ்யத் தலைவர்களை அடிக்கடி போய்ப் பார்த்துத் தன் காரியத்துக்கு அடிகோலி வந்தான்.

ரோம் ஸாம்ராஜ்யத்தின் நிர்வாகம் மிகவும் சீர்கேடான நிலையில் இருந்தது. நாட்டின் நிர்வாகம் பெயரளவில் குடிமக்கள் கையில் இருந்தது. குடியரசு நாடுதான்; ஆனால் உழுதுண்டு வாழும் குடிமக்களுக்கு நிர்வாக விஷயம் என்ன தெரியும்? தலைவர்களுடைய கைப் பொம்மைகளாகவே அவர்கள் இருந்து வந்தார்கள். தலைவர்களே கைக்கூலி பெறும் சுயநலப் பிரியர்களாக மாறிவிட்டால், அப்பால் கேட்கவேண்டுமா? எனினும் பெயரளவில் அவர்கள் அங்கீகாரம் அவசியமாகத்தான் இருந்தது.

'சந்தனக் கட்டை, மிளகு, கிராம்பு முதலியவை இல்லாமல் நம் முன்னோர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்தவில்லையா? அவர்களைப் போலவே நாமும் வாழ முடியாதா? அப்படி அவை இன்றியமையாதவை

களாக இருக்குமாயின் நாம் ஏன் அவற்றை நம் நாட்டி லேயே பயிரிடக் கூடாது? நம் நாட்டில் அவை வளராவாயின், அவை பயிராகக் கூடிய நாட்டை நாம் ஏன் கைக்கொள்ளலாகாது?'

இவ்விதம் அண்டியோகஸ் வாதம் செய்து பார்த் தான் அவனுடைய கட்சியை நன்றாக எடுத்துச் சொல் லப் பலர் முன்வந்தனர். கூலி வாங்கிக்கொண்டு, அவன் வாதத்தை அழகிய மொழியில் பல காரணங்களுடன் வேகம் தொனிக்கும்படி எழுதிக் கொடுக்க எழுத்தாளர் பலர் காத்திருந்தனர். காசாசை கொண்ட அவர்கள் எழுத்தின் விறுவிறுப்பை வாசிப்பவர் சிறிதும் எதிர்க்க முடியாது.

தங்களுக்குக் கிடைக்கும் கூலிக்கு ஏற்ப அவர்களு டைய எழுத்தின் வேகமும் அதிகரிக்கும். ரோம் ஸாம் ராஜ்யத்திலே அந்தக் காலத்தில் இத்தகைய எழுத் தாளர்கள் பலர் நிறைந்திருந்தனர். அண்டியோகஸ் தனக்கு இருந்த உணர்ச்சிப் பெருக்கினால் எப்படியா வது தன் எண்ணம் கைகூடினால் போதும் என்றே எண்ணினான். ஆகவே அவன் ஏராளமான பணத்தை அவர்களுக்குக் கொடுத்துத் தன் கட்சியை ஆதரிக்கும் படி எழுதச் செய்தான்.

தமிழ்நாட்டு வாணிகத்தால் யவன ஸாம்ராஜ்யம் வருஷந்தோறும் அடைந்து வரும் நஷ்டத்தை அவர்கள் சுலபமாக எடுத்துக் காட்டினார்கள். ஒவ்வொரு வருஷ மும் ஸாம்ராஜ்யத்தின் வருமானத்தில் பாதிக்குமேல் பிற நாட்டாருக்குத் தாங்கள் கொட்டிக் கொடுப்பதை விளக்கிக் கூறினார்கள். வாணிகத்திற்காகப் பிற நாட்ட வர் கொண்டு வரும் சரக்குகளுக்குப் பதிலாக அவர்கள்

வாங்கிச் செல்லும் யவன தேசத்துப் பொருள்கள் அதிகம் இல்லை; திராக்ஷைப்பழ ரஸமான மதுவும் குதிரைகளுமே. நெருப்புப் பட்டால் கரிக்கட்டியாக மாறும் வைரம், வைடூரியம் முதலிய கற்களைக் கொடுத்து, ஏராளமான தங்கத்தை வாரிச்செல்லும் அந்த வாணிகத்தை அவர்கள் பகற் கொள்ளை என்றே வருணித்தார்கள். நாகரிகமற்ற ஜனங்கள் வாழும் அந்த நாடுகளை யவன ஸாம்ராஜ்யத்தில் சேர்த்துவிட்டால் அதனால் ஸாம்ராஜ்யத்துக்கு ஏற்படக் கூடிய லாபங்களை விவரித்துக் கூறினார்கள்.

'ஸாம்ராஜ்யத்தின் க்ஷேமத்தைக் கருதினால், இப்போது உள்ள நிலைமை மாறியாக வேண்டும். அது இல்லாமல் இந்த விதமாகவே நடந்துகொண்டிருந்தால் நம்முடைய சுதந்தர வாழ்வின் அந்திய காலம் சமீபித்துவிட்டது என்றே சொல்லலாம்.'

இவ்விதம் முடிவடைந்த அவர்கள் கட்டுரைகளைப் படித்தவர்கள் பயத்தையும் பீதியையும் அடையாமல் வேறு என்ன செய்ய முடியும்? மக்களின் மனநிலையைப் பக்குவப் படுத்தித் தமிழ்நாட்டின் மீது போர் தொடுக்க ஆசை கொண்டான் அண்டியோகஸ். அதனால் அவனுக்கு எத்தனையோ அநுகூலங்கள் கிட்டும்.

படையெடுப்புக்கு அவனே தலைமை பூண்டு செல்லலாம். வெற்றிகொண்டால், கைப்பற்றிய பிரதேசங்களுக்கு அவனே அதிபதியாகவும் ஆகலாம். ஸாம்ராஜ்ய நிர்வாகத்துக்கு ஏதோ வருஷந்தோறும் கொஞ்சம் திறைப் பணத்தையும் ரோமாபுரியில் இருந்த ஸாம்ராஜ்யத் தலைவர்களுக்குத் தேவையான கைக் கூலியையும் கொடுத்துவிட்டால், அப்பால் அவனைப்பற்றி யார்

கவலை கொள்ளப் போகிறார்கள்? அவன் யதேச்சாதி காரம் நடத்தினாலும் அதைப்பற்றி ஒருவரும் காதில் போட்டுக்கொள்ள மாட்டார்கள். ஆம்; முன்னர் அவன் அந்தத் தமிழனிடம் இழந்த பொருள்களைப் பத்து மடங்காகத் திரும்பப் பெறலாம்.

அது மட்டுமன்று. அந்தோனியாவை மறுபடியும் கைப்பற்றிவிடலாம் என்ற சபலமும் அவனுக்கு உண்டு. அதுவே முக்கிய காரணம் என்றும் கூறலாம்.

அணடியோகஸ் பணத்தைப் பணம் என்று மதியா மல் வாரி இறைத்தான். அவன் ஆசையின் முதற் படியைத் தாண்டிவிட்டான். ரோம் ஸாம்ராஜ்யத்தின் மக்கள் பெயரளவிலேயே ஆதிக்கம் புரிந்து வந்தவர்களாயினும் தமிழ்நாட்டுப் படையெடுப்பை அங்கீகரித்தார்கள். படை யெழுச்சிக்கான ஏற்பாடுகள் வெகு துரிதமாக நடைபெறலாயின.

# ௬

# கரும்புத் திருவிழா

நகர் முழுதும் ஒரே குதூகலமாக விளங்கியது. எங்கே பார்த்தாலும் ஜனத்திரள் நிரம்பியிருந்தது. ராஜ வீதிகளிலும் கோயிலுக்குச் செல்லும் பாதைகளிலும் மக்கள் தங்களை நன்றாகச் சிங்காரித்துக்கொண்டு உலவி வந்தனர். இரு புறங்களிலும் வித்தையாடிகளும் வேடிக்கை பார்ப்பவர்களும் சிறு சிறு கூட்டங்களாக நின்றிருந்தனர். தின்பண்டங்களையும் விளையாட்டுப் பொம்மைகளையும் காட்டிச் சிறுவர்களை இழுத்துத் தங்கள் பொருள்களை விற்றுக் காசு முடியும் சில்லறை வியாபாரிகள் ஓர் இடத்தில் நில்லாமல் அங்கங்கே திரிந்துவந்தனர்.

அன்றைக்குச் சொக்கநாதர் கல் யானைக்குக் கரும்பு அளிக்கும் திருநாள். விடிந்ததிலிருந்தே மக்கள் தங்கள் வேலைகளை விட்டு, அன்றைத் தினத்தை உல்லாசமாகக் கழிக்கத் தயார் செய்துகொண்டு கிளம்பிவிட்டனர். சொக்கநாதரைத் தங்கள் குலதெய்வமாகக் கொண்ட பாண்டிய மன்னனும் திருவிழாவை உடனிருந்து நடத்தி வைக்கப் பெருமானுடன் பவனி வருவான். அந்தக் காட்சியைப் பார்க்க நாட்டின் நாலு பக்கங்களிலிருந்தும் மக்கள் தலைநகருக்கு வந்து கூடிவிட்டனர்.

அந்தக் கூட்டத்தில் அவள் ஒரு தனியளாகவே விளங்கினாள். அவளுடைய மேனி நிறம், தேகக்கட்டு, முக வெட்டு, நடை, உடை ஆகிய எல்லாம் வேறாகவே இருந்தன. அதைப் பிறர் உணர்ந்தார்களோ இல்லையோ,

அவள் உணர்ந்துவிட்டாள். எங்கே திரும்பினாலும் கூட்டத்தில் உள்ளவர்கள் தன்னையே கூர்ந்து கவனிப் பதைக் கண்டாள் அவள். அது உண்மையா அல்லது மனப் பிரமையா?

அந்தோனியா முதலில் அதைக் கவனிக்கவில்லை. மனித சமூகத்தின் அலைகளால் உந்தித் தள்ளப்பட்ட அவள், கும்பலுள் ஒருத்தியாகக் கலந்து அதனுடன் போய்க்கொண் டிருந்தாள். எறும்பு ஊரும் வேகத்தில் போய்க்கொண் டிருந்தது அந்தக் கூட்டம்.

"அவள் யார்?"

பின் புறத்திலிருந்து உண்டான அந்தப் பெண்குரலை அவள் முதலில் கவனிக்கவில்லை. "யாரோ, யவனச் சேரியி லிருந்து வந்தவளாக இருக்கும்" என்று மற்றொருத்தி, முதலில் கேட்டவளுக்குப் பதில் சொன்னாள்.

'யவனச் சேரி' என்ற சொல்லைக் கேட்டதுந்தான் அந்தோனியா திடுக்கிட்டாள்.

அவர்கள் தன்னைப் பற்றியே பேசுகிறார்கள் என் பதை உணர்ந்தாள் அந்தோனியா. அதனால் அவர்கள் யார் என்பதை அறியத் திரும்பிப் பார்த்தாள்.

யாரோ நாட்டுப்புறத்துப் பெண்கள் அவ்விருவரும். அந்தக் கும்பலில் அவர்களைப்பற்றி வேறொன்றும் அதிக மாக அறிய முடியவில்லை. அவர்களைக் குறிப்பாகப் பார்த் துக் கொள்ளவும் அந்தோனியாவால் முடியவில்லை. அன்றி, அவர்கள் என்ன பேசிக்கொண் டிருந்தார்கள் என்பதையும் அவளால் தெரிந்துகொள்ள முடியவில்லை. அந்தோனியாவுக்குத் தமிழ்ப் பேச்சு நன்றாக வரவில்லை. அவர்கள் பேச்சில் அங்கொன்றும் இங்கொன்றுமாகவே அவளுக்குப் புரிந்தது.

ஆனால் அவர்களுடைய முக பாவத்தைக் கொண்டு அவர்கள் பேசியது என்னவாக இருக்கும் என்பதை ஊகித்துக்கொண்டாள்.

"ஊரை விட்டு, தேசத்தை விட்டு இங்கே வந்து என்ன செய்கிறாள், அவள்? புருஷர்கள் என்னவோ வியாபாரம் செய்வதற்காக வந்து போகிறார்கள். பெண் மக்கள்......?" என்று மிக்க வியப்புடன் வினவ ஆரம்பித்தாள் முதலில் கேட்டவள்.

மற்றொருத்தியோ, "ஏன், அரசருடைய அந்தப் புரத்துச் சேவகத்தில் எத்தனை யவனப் பெண்கள் இருக்கிறார்கள், தெரியுமா?" என்று சிறிது அலட்சியமாகவே பதில் சொன்னாள்.

அதற்குள் பவனி வரும் மன்னனுடைய பரிவாரம் நெருங்கி வந்துவிட்டது. அதற்கு வழி விடுவதற்காகக் காவலர்கள் கூட்டத்தை விலக்கிச் சென்றனா. ஜனங்கள் ஒருவரை ஒருவர் மோதிப் பின்னால் நகர்ந்தார்கள். கூட்டத்தில் சிக்குண்ட அந்த நாட்டுப்புறத்துப் பெண்கள் இருவரும் எங்கேயோ பிரிந்து போய்விட்டார்கள். அதற்குப் பிறகு அந்தோனியா அவர்களைப் பார்க்கவில்லை.

அவர்களைப் பார்க்காவிட்டாலும் அவாகள் வாயிலிருந்து வெளிப்பட்ட சொற்களை மட்டில் அந்தோனியாவால் மறக்கவே முடியவில்லை. பாண்டிய மன்னனது அரண்மனையில் ஏவல் தொழில் புரியும் பணிப்பெண்கள் பலருள் ஒருத்தியாகத் தன்னையும் அவர்கள் மதித்துவிட்டார்களே என்ற துக்கந்தான் அவள் இருதயத்தைப் பிளந்தது.

மன்னனது பவனி நெருங்க நெருங்க அந்தத் துக்கம்

அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. அரசன் முன்னல் யவன வீரர்கள் கத்தியும் கேடயமும் தாங்கிக் காவல் புரிந்து சென்ருர்கள். அந்தக் காட்சி பிறரைச் சந்தோஷப்படுத்திய போதிலும் அந்தோனியாவின் உள்ளத்தைக் கோடரியால் வெட்டுவது போலத் தாக்கியது.

தமிழ் மக்களுக்கு யவனப் பெண்களைப்பற்றி அதிகமாகத் தெரியாது. தங்கள் நாட்டுக்கு வந்த பெண்களைப் பற்றித் தெரிந்துகொண்டனவே அவை. அவர்கள் இங்கே வந்து அரசன் அந்தப்புரங்களுள் புகுந்து சேவகம் புரிந்துவந்தனர். யவன வீரர்களும் அதே போலத் தமிழ்நாட்டு அரண்மனைகளில் கத்தியும் கேடயமும் தாங்கிக் காவல் புரிந்துவந்தனர். அவர்கள் ஊர்ப் புறத்தே தனியாக யவனச் சேரியில் வசித்துவந்தனர். வாணிகத்துக்காகத் தங்கள் நாட்டை விட்டுத் தமிழநாடு வருபவர்களும் உண்டு. அவர்களும் அந்தச் சேரியிலேயே தங்குவர்.

பிறருக்குத் தலை வணங்காத ரோம் ஸாம்ராஜ்யத்தைச் சேர்ந்த போர்வீரர்கள் இவ்விதம் தமிழ்நாட்டு மன்னர்களிடம் கை கட்டிக் குற்றேவல் புரியவா வேண்டும்? யவனர்கள் தங்கள் மதிப்பை இழந்துவிட்டனரா, இத்தகைய இழி தொழிலைச் செய்வதற்கு? அல்லது பாண்டிய அரசு, ரோம் ஸாம்ராஜ்யத்தைத் தலை குனியச் செய்துவிட்டதா? ஸாம்ராஜ்யத்தின் வளப்பத்தையும் தங்கள் மேன்மையையும் பெருக்கிக்கொள்ள யவன மக்கள் கடல் கடந்து பிற நாடுகளில் வியாபாரம் செய்வதில் கேடு ஒன்றும் இல்லை. அத்தகைய நிலையை அடைவதற்கு மார்க்கமாக அவர்கள் பிறரிடம் சேவகம் பார்ப்பதிலும் குற்றம் இல்லை. ஆனல் தங்கள் பெண்மக்களை அவர்கள் ஏன் இவ்விதம் பிற தேசங்களில் அடிமைத்

தொழில் செய்ய அநுமதிக்கவேண்டும்? தங்கள் பெண்களுக்கு இழைக்கப்படும் இந்த அநீதியை யவன ஸாம்ராஜ்யத்தின் அதிபதிகள் தடுக்க முடியாதா?-இவ்விதம் யோசித்தாள் அந்தோனியா.

ஆனால் அவள் முக்கியமான விஷயத்தை மறந்துவிட்டாள். தமிழ்நாட்டு அரண்மனைகளிலே சேவகம் செய்து வந்த யவனர்கள் யாவரும் சுதந்தரம் வாய்ந்தவர்கள் அல்லர். அவர்களில் பெரும்பாலோர், சுதந்தரத்தை இழந்து நாடு கடத்தப்பட்டவர்கள், ஆசியாவின் மேற்குப் பகுதி, ஐரோப்பாவின் கீழ்ப் பிரதேசம் (மிசிரம்), எகிப்து முதலிய இடங்களினின்றும் விலைக்கு வாங்கியும் கைப்பற்றியும் கூட்டிய அடிமைகள், அவர்களுடைய பெண்டு பிள்ளைகள் ஆகியவர்களே.

அவ்விதம் கைப்பற்றிய பெண்மக்களை அடிமைகளாக விற்றுவிடவோ வேறு எந்த விதமாகவாவது விநியோகம் செய்யவோ ஆணமக்களுக்கு உரிமை உண்டு. அதை யாரும் மறுக்க முடியாது. எனினும் அதனால் தங்கள் ஜாதிக்கு ஏற்படும் அகௌரவத்தையும் அவளால் மறக்க முடியவில்லை. இந்த அவமதிப்பு ஒரு நாள் தங்கள் பெருமையைக் குலைத்துச் சமூகத்தின் அடிப்படையையே அசைத்துவிடக் கூடும் என்பதை அதிபதிகள் உணரவில்லையே என்று வருந்தினாள்.

அது அந்தோனியாவின் மனத்திலே ஈட்டிபோலப் பாய்ந்து துன்புறுத்தியது. அவளால் அங்கே நின்று வேடிக்கை பார்க்க முடியவில்லை. கூட்டத்திலே கலந்து நின்று திருவிழாப் பார்க்கவேண்டும் என்ற ஆசை போய் விட்டது; அவள் உற்சாகம் குன்றிவிட்டது. சந்தோஷத்துடன் திருவிழாப் பார்க்கச் சென்ற அந்தோனியா

பிளந்த இருதயத்துடனும் வாடிய முகத்துடனும் திருவிழாவைப் பார்க்காமலே வீடு திரும்பினாள்.

உற்சவம் பார்க்க வந்தவர்களுள் யாரோ ஒருத்தி ஏதோ பேசினாள் என்றால் அதைக் கேட்டு அந்தோனியாவின் மனம் புண் ஆவானேன்?

அதற்குக் காரணமும் இருந்தது.

அவள் மதுரையிலே யவனச் சேரியிலே வசித்து வரவில்லை. தன் புருஷன் சாத்தனுடன் ராஜ வீதியிலே அரண்மனை போன்ற ஒரு பெரிய மாளிகையில்தான் வாழ்ந்துவந்தாள். அவளது உள்ளக் குறிப்பை அறிந்து பணிவிடை செய்ய வேலையாட்கள் பலர் இருந்தனர். தமிழ் நாட்டு வேலைக்காரர்களைத் தவிர, அவளுடைய பிறந்த தேசத்துப் பழக்க வழக்கங்களை அறிந்து அவைகளுக்கு ஏற்ப நடந்துகொள்வதற்காக யவனர்களும் சிலர் இருந்தனர்.

அந்தோனியா மதுரை வந்து ஆறுமாச காலம் ஆகிவிட்டது. தமிழ்நாட்டுக்கு வந்த புதிதில் அவள் வாழ்க்கை இன்பமாகவே கழிந்தது. இளமையும் மோகமும் கொண்ட ஆனந்த வெள்ளத்தில் அவள் சாத்தனுடன் மூழ்கி விளையாடித் திரிந்து மிதந்து வந்தாள். ஆனால் காலம் மாறிக்கொண்டே போகும் தன்மை வாய்ந்ததன்றோ?

முதல் இரண்டு மூன்று மாசங்கள் அவள் வீட்டை விட்டு வெளியே வரவில்லை என்றே சொல்லலாம். சாத்தன் நிலைமையும் அப்படித்தான் இருந்தது. வியாபாரத்தில் ஏற்பட்ட லாபம், மன்னனுக்காகத் தூது சென்றதில் அடைந்த வெற்றி, எதிர்பாராமல் கிடைத்த கன்யாரத்தினம் ஆகிய மூன்றும் அவனை மயக்கிவிட்டன. தன்

வாழ்க்கையின் லட்சியம் கைகூடிவிட்டதாகவே எண்ணித் தான் இனிச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை என நினைத்தான் போலும். அந்தோனியாவின் மோக வலையில் சிக்கிய அவன் வெளியே வராமல் வீட்டினுள்ளேயே கிடந்தான்.

'குந்திக்கொண்டு தின்றால் குன்றும் கரைந்து விடும்.' வருவாய் இல்லாமல் செலவு செய்துகொண்டே வந்தால், அது நீடித்து நடக்காது. அதனால் மையலின் புதுமை நீங்கியதும் அவன் கொஞ்சங் கொஞ்சமாக வெளிக்கிளம்பித் தன் காரியங்களைக் கவனிக்கத் தொடங் கினான்.

சாத்தனை விட்டுப் பிரிந்து கணநேரமும் தனியாக இருக்க மனங்கொள்ளாத அந்தோனியா, காட்டு மரத் தைச் சுற்றிப் படரும் கொடிபோல அவனைத் தொடர்ந்து உடன் சென்றுவந்தாள். இளங் காதலர்கள் தங்கள் நடத்தையில் வேறுபாட்டையோ சமூக வாழ்க் கைக்கு விரோதமானதையோ எதையும் எதிர்பார்க்க வில்லை. பெண்கள் ஆடவர்களுடன் கூடவே வெளியில் உலவப்போவது யவன தேசத்து நாகரிகத்துக்குப் புறம் பானதன்று.

தமிழ்நாட்டுப் பெண்களும் அடிமைகளைப்போல அடுப்பங்கரையை விட்டு வெளிவராமல் உள்ளே அடைத் துக் கிடக்கவில்லை. எனினும் அவர்கள் புருஷர்களுடன் இரண்டறக் கலந்து பழகவில்லை. அவர்களிடையே மெல் லிய திரைபோன்ற விலக்கு ஒன்று இருக்கத்தான் இருந் தது. அதனால் அந்தோனியாவின் நடத்தை பொதுமக் களுக்கு விநோதமாகத் தோன்றியது. ஆரம்பத்தில் அவர் கள் இந்தப் புதிய கோலத்தைக் கண்டு ஆச்சரியப்பட்

டார்கள். ஆயினும் கொஞ்ச காலத்திற்கெல்லாம் இது அலுத்துவிட்டது. அவள் வெளிநாட்டவள். அவளுக்கு அது குற்றமாக இராமல் இருக்கலாம். ஆனால் அந்தப் பழக்கம் தங்களிடையிலும் பரவிவிட்டால் என்ற பயம் அவர்களுக்கு ஏற்பட்டது போலும்!

அன்றி, அவள் ஆடை அணிந்திருந்ததும் புதிய முறையாக இருந்தது. தன் மேனியழகை வெளிக்காட்டுவதற்காகவே அவள் அவ்விதம் உடுத்துவந்தாள் என்றே ஜனங்கள் எண்ணலாயினர்.

அந்தோனியாவுக்கும் இந்த விஷயம் அதிக நாள் மறைமுகமாக இருக்கவில்லை. போதை கொண்டவர்களைப் போல ஜனங்கள் தன்னை வெறித்து நோக்கும் பார்வையிலே அவள் உண்மையை அறிந்துகொண்டாள். தன்னையும் தமிழ்நாட்டுப் பெண்களுள் ஒருத்தியாகச் செய்து கொள்ளவே அவள் முயன்றாள். தமிழ்ப் பெண் மாதிரியே உண்டு, உடுத்துப் பேசி, நடந்தாள். எனினும் வேறுபாடு தோன்றாமல் அவற்றைக் கைக்கொள்ள அவளால் முடியவில்லை. முக்கியமான சமயங்களில் அவை அவளைக் காட்டிக்கொடுத்துவிட்டன. அவ்விதம் நடந்த நிகழ்ச்சிகளுள் ஒன்றுதான் அன்றைத் தினத் திருவிழாச் சம்பவமும்.

# 7

# நோய்க்கு மருந்து

"வைத்தியா என்ன சொல்லிவிட்டுப் போனார்?"

"ஜுரம் படிந்துகொண்டு வருகிறது; இனிப் பயம் இல்லை, இன்னும் இரண்டு தினங்களில் சௌக்கியம் ஆகிவிடும் என்றார்."

'உம்' என்று ஒரு பெரு மூச்சு விட்டுப் படுக்கையில் திரும்பிப் படுத்தாள் அந்தோனியா.

"வீணாக உடம்பை அலட்டிக்கொள்ளாதே" என்று ஆசை ததும்பும் குரலில் கூறிய சாத்தன் மெதுவாக அவளைச் சரியாகப் படுக்க வைத்து, "நீ இவ்விதம் அடிக்கடி புரளுவதால்தான் உடம்பில் வலி ஏற்படுகிறதென்று வைத்தியர் சொல்லுகிறார். இப்படியே படுத்துக் கொண்டு இரேன்" என்று சொன்னான்.

"ஆமாம், ஆறு மாசமாகத்தான் வைத்தியம் செய்கிறார்; ஒரு குணத்தையும் காணோம்" என்று வெறுப்புத் தோன்றும் குரலில் தனக்குத் தானே பேசிக்கொண்டாள் அந்தோனியா. சிறிது நேரம் பொறுத்து, "மார்க்கஸ் என்ற எங்கள் தேசத்து வைத்தியர் ஒருவர் வந்திருக்கிறாராமே. அவரை அழைத்து வந்து காட்டுங்களேன். ஒருவேளை அவராகிலும் ஏதாவது செய்ய முடியுமா, பார்க்கலாம்" என்றாள்.

சாத்தன் தான் நினைத்தபடியே நேரிடுவதைக் கண்டு திடுக்கிட்டான்.

"நேற்றே அவரைக் கூப்பிட்டிருக்கிறேனே. இப்போது வருவார். அவா வருகிற சமயந்தான்" என்று சொன்னான்.

ஆனால் அந்தோனியா அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவள் போல், "யார் வந்துதான் என்ன? கடவுள் கண்திறந்து என்னைச் சீக்கிரம் அழைத்துக் கொண்டு போய்விட்டால் போதும்" என்று அலுத்துக் கொண்டாள்.

அந்தோனியா ஆறுமாச காலமாகப் படுத்த படுக்கையாகக் கிடந்துவந்தாள். சாத்தன் அவளுக்குப் பார்க்காத வைத்தியம் இல்லை. ஆனால் அவளைப் பிடித்திருந்த நோய் என்ன என்பதே ஒருவருக்கும் பிடிபடவில்லை.

வைத்தியர்களையோ அவர்கள் கொடுத்து வந்த மருந்தையோ குறை கூற முடியாது. அவர்கள் வியாதியின் தன்மையை அறிந்தே மருந்து கொடுத்தார்கள். எந்த மருந்தும் உட்கொண்டவுடன் அதன் குணத்தைக் காண்பித்து நோயைப் போக்கும். ஆயினும் இரண்டு தினங்களுக்கெல்லாம் மறுபடியும் அந்த வியாதி முருங்கை மரத்தில் ஏறும் வேதாளத்தைப் போல் திரும்பிப் பிடித்துக்கொள்ளும்.

உடற் பிணிக்கு வைத்தியனைக் கொண்டு சிகிச்சை செய்துவிடலாம்; ஆனால் மன வியாதியோ அவ்விதம் அன்று. அந்தோனியாவுக்கு ஏற்பட்டிருப்பது மன வியாதியே என்று சாத்தன் நன்றாக அறிந்துகொண்டான். ஆனால் அது எதைப் பற்றியது, எத்தகையது என்பவற்றை அவன் அறியவில்லை.

சாத்தன் பழைய சம்பவங்களை ஒவ்வொன்றாக ஞாபகப்படுத்திப் பார்த்தான். அவளுக்கு எந்த விதமான

மனக்குறை ஏற்பட்டிருக்கக் கூடும் என்று ஆராய்ந்தான். ஆயினும் அவனுக்கு ஒன்றும் புலப்படவில்லை.

அன்றொரு நாள், ஆறு மாச காலத்துக்கு முன்பு, கல்லானைக்குச் சொக்கநாதர் கரும்பு அளிக்கும் உற்சவ தினத்தன்று சாத்தன் தன் மாளிகைக்குத் திரும்பி வந்தது முதல்தான் இது ஆரம்பமாயிற்று. அதற்கு முன்னர் அவர்கள் காலம் இன்பமாகக் கழிந்துவந்தது.

மதுரைக்கு வந்த புதிதில் அவர்கள் வாழ்க்கை இளமையும் மோகமும் கொண்ட ஆனந்த வெள்ளத்தில் மிதந்து சென்றது. அவர்கள் அதனுள் முழுகி விளையாடித் திளைத்து வந்தனர். ஆனால் காலம், மாறிக்கொண்டே போகும் தன்மை வாய்ந்தது அன்றோ?

வியாபாரத்தில் ஏற்பட்ட லாபம், மன்னனுக்காகத் தூது சென்றதில் கிட்டிய காரிய சித்தி, எதிர்பாராமல் கிடைத்த கன்யா ரத்தினம் ஆகியவை அவனை மயக்கின. அந்தோனியாவின் மோக வலையில் சிக்குண்டிருந்த சாத்தன் உலகத்தை மறந்தே போனான். ஆயினும் எவ்வளவு நாள் அப்படி இருக்க முடியும்? குலத் தொழிலான வாணிகத்தை அவன் கவனிக்காவிட்டாலும், அதன் விளைவாக உண்டான அரசாங்க காரியங்களை அவன் அலட்சியம் செய்ய முடியுமா? மையலின் புதுமை நீங்கியதும் அவன் சிறிது சிறிதாக வெளிக்கிளம்பித் தன் காரியங்களைப் பார்க்கலானான்.

சாத்தனிடமிருந்து பிரிந்து கண நேரமும் தனியாக இருக்க மனங்கொள்ளாத அந்தோனியா காட்டு மரத்தைச் சுற்றிப் படரும் கொடியே போல அவனைத் தொடர்ந்து உடன் சென்று வந்தாள். சாத்தனைக் காணும் இடங்களிலெல்லாம் அந்தோனியாவையும் காணலாம்.

அந்தோனியாவின் நடத்தை தமிழர்களுக்கு விநோதமாகத் தோன்றியது. ஆரம்பத்தில் அவர்கள் அந்தப் புதுக் கோலத்தைக் கண்டு வியந்தனர். ஆயினும் கொஞ்ச காலத்திற்கெல்லாம் அதில் வெறுப்புத் தட்டியது. வெளிநாட்டாளாதலால் அவளுக்கு அது குற்றமாகத் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் அந்தப் பழக்கம் தங்களிடையிலும் பரவிவிட்டால் என்ன செய்வது என்ற பயமும் அவர்களுக்கு ஏற்பட்டது போலும்.

தமிழ்ப் பெண்கள் அடிமைகளைப்போல அடுப்பங் கரையை விட்டு வெளியே வராமல் உள்ளேயே அடைந்து கிடக்கவில்லை. எனினும் அவர்கள் ஆடவர்களுடன் இரண்டறக் கலந்து பழகவில்லை. ஆண், பெண் ஆகியவர் களுக்கிடையே மெல்லிய திரை போன்ற விலக்கு ஒன்று இருக்கவே இருந்தது.

அன்றி, அவள் ஆடை அணிந்திருந்ததும் புதிய முறையாக இருந்தது. தன் மேனியழகை வெளிக் காட்டு வதற்காகவே அவள் அவ்விதம் உடுத்திருந்தாள் என்றே மக்கள் எண்ணலாயினர்.

அந்தோனியாவுக்கு இந்த விஷயம் அதிக நாள் மறைமுகமாக இருக்கவில்லை. போதை கொண்டவர்களைப் போல ஜனங்கள் தன்னை வெறித்து நோக்கும் பார்வை யில் அவள் உண்மையை அறிந்துகொண்டாள். தன் பழைய வழக்கங்களை உதறித் தள்ளிவிட்டுத் தமிழ் நாட் டவர்களுள் ஒருத்தியாகவே தன்னைச் செய்துகொள்ள முயன்றாள். தமிழ்ப்பெண் போலவே உடுத்தும் பேசியும் நடந்துவந்தாள். எனினும் அவற்றை வேறுபாடு இல்லா மல் அவளால் கைக்கொள்ள முடியவில்லை. முக்கியமான சமயங்களில் அவை அவளைக் காட்டிக்கொடுத்துவிட்டன.

கரும்புத் திருநாளன்று நாட்டுப்புறத்துப் பெண்கள் அந்தோனியாவைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தது அவள் மனத்தில் நன்ருகத் தைத்துவிட்டது. அவர்கள் தன்னைப் பாண்டிய மன்னன் அரண்மனையில் ஏவல் தொழில் புரியும் பணிப்பெண்களுள் ஒருத்தியாக மதித்துவிட்டனரே என்ற துக்கந்தான் அவளைப் பெரிதும் வாட்டிவந்தது.

அந்தோனியா இவ்விதம் உற்சாகம் குன்றி, உடைந்த உள்ளத்துடன் கிடந்தாள். ஆனல் சாத்தனே அவள் உள்ளத்தை அறியாமல் உடற் பிணியைப் போக்க வைத்தியம் செய்துவந்தான்.

அவன் எதிர்பார்த்திருந்தபடியே யவன வைத்தியன் மார்க்கஸும் அந்தச் சமயம் வந்தான். அந்தோனியாவின் உடல் நிலைமை நன்ருகப் பரிசோதித்தான். அதுவரையில் செய்து வந்த வைத்தியத்தையும் விவரமாகக் கேட்டு அறிந்தான். ஆயினும் அவன் ஓர அபிப்பிராயமும் கூருமல் அப்படியே உட்கார்ந்துவிட்டான்.

வைத்தியருடைய முகத் தோற்றத்தைக் கொண்டே நோயாளியின் நிலைமையை அறிந்துவிடலாம். மனத்திற்குப் பயமளிக்கக் கூடிய விஷயங்களை அவர்கள் வாய் விட்டுச் சொல்லக் கூடாது. அது அவர்கள் தொழில்முறை. ஆயினும் அவர்கள் உள்ளத்தே தோன்றும் எண்ணங்களை முகம் காட்டிவிடும். அவற்றை மறைக்க முடியாது.

அவருடைய முகத்தைப் பார்த்ததும் சாத்தனுக்கு உண்மையில் பயம் ஏற்பட்டு விட்டது. 'அந்தோனியா ஒருகால் பிழைக்க மாட்டாளோ?' என்று ஏங்கினன்.

மார்க்கஸ் யவன வைத்தியனுனலும், இந்திய மருத்துவ முறையையும் நன்ருக அறிந்தவன். அதனை முழு

மையும் கற்றுப் போகவே அவன் தமிழ் நாட்டுக்கு வந்திருந்தான். பச்சிலைகளையே பிரதானமாகக் கொண்ட ஆயுர்வேதத்தை எல்லாத் தேசங்களிலும் பயில முடியாது. சில மூலிகைகள் இந்நாட்டிலேயே வளருர். அவை கிடைக்காத காலங்களில் அவற்றின் குணத்தையுடைய உலோக சத்துக்களைக் கொடுக்க வேண்டும்.

தமிழ் நாட்டிலே அத்தகைய முறை வெகு நாளாக இருந்துவருகிறது. அதை அறிந்து போக வந்தவனே மார்க்கஸ்.

"இது இருதய சம்பந்தமான நோய் என்று எனக்குத் தோன்றுகிறது. கொஞ்ச காலம் வேற்றிடத்திற்கு அழைத்துச் சென்றுப் பணிவிடை செய்து பார்த்தால நலம். வேறு புதிய மருந்து ஒன்றும் வேண்டியதில்லை என்று எண்ணுகிறேன்" என்று திடமான குரலில் அவன் சொல்லிவிட்டான்.

மார்க்கஸ் கூறிய சொல ராத்தனைப் பேய் அறை போலச் சென்று தாக்கியது. அவன் முகம் வெளுத்தது. அவன் தன்னைச் சமாளித்துக்கொண்டு பதில் சொல்ல ஆரம்பித்தான். அதற்குள் வேலையாள் வந்து, "அரண்மனையிலிருந்து ஆள் வந்திருக்கிறன். அரசர் தங்களைக் கூப்பிடுகிருராம்" என்று சொன்னன்.

# 8

# செய்தி பறந்தது

"நான் யாருக்கு எதற்காகப் பயப்பட வேண்டும்? நான் இழைத்த குற்றந்தான் என்ன? நியாயம் என் பக்கத்தில் இருக்கையில் தெய்வம் ஒரு நாளும் என்னைக் கைவிடாது" என்று தெருவோடு செல்பவர்களுள் ஒருவன் மற்றவனைப்பார்த்துச் சொல்லிக்கொண்டு போனான்.

"அரசே, அதோ அந்த வாய்ச்சொல்லைக் கேட்டீர்களா?" என்று கூறினான் அமைச்சன்.

மாறன் செழியனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. தான் கேட்பது கனவா, நனவா என்றே மயங்கினான் அவன். அந்த வாய்ச்சொல் அவனது உள்ளக் கிடக்கையை அப்படியே எடுத்துக் காட்டுவது போல இருந்தது.

அதி காலை. விடிய ஐந்து நாழிகைப்பொழுது இருக்கும். மன்னனும் மந்திரியும் 'பாக்கத்து விரிச்சி' என்று சொல்லப்படும் அசரீரியான 'வாய்ச்சொல்'லைக் கேட்க வெளியே கிளம்பினார்கள். ஊர் முழுதும் அடங்கிக் கிடக்கும் அந்த வேளையில் ஒன்றிரண்டு பேர்கள் பேசுவது நன்றாகக் கேட்டது. அந்த வாய்ச்சொல்லே செழியன் தீர்மானத்தை உறுதிப்படுத்தியது.

அதுவரையில் அவன் மனம் ஊசலாடிக்கொண்டிருந்தது. அவன் எவ்விதம் முடிவு செய்வது என்னும் வகை அறியாமல் தவித்துக்கொண்டிருந்தான்.

யுத்தத்தால் நாட்டு மக்களுக்கு நேரிடக் கூடிய இன்னல் களையும் இடுக்கண்களையும் சிந்தித்து மனம் புழுங்கி ஞன். போர் தொடுப்பதை நிவர்த்திக்க முடியுமா என்று பல படியாக ஆராய்ந்து பார்த்தான்.

உலகத்திலே மானிடராகப் பிறந்தவர்களுக்கு மானம் பெரிதேயன்றிப் பிராணன் பெரிதாகாது; அதனையே லட்சியமாகக் கொண்டு அரசு செலுத்தி வந்த செழியன் தன் கௌரவத்தை இழக்கச் சம்மதிக்க வில்லை. ஆயினும் யுத்தம் செய்வதால் நாட்டின் அமைதி குலைந்து, வறுமை மிகுந்து, மக்கள் அழிந்து போக நேரிடுமே என்று கலங்கினுன் அரசன். அவ்வித மான நிலைமையை ஏற்படுத்த அவன் விரும்பவில்லை.

யவனாகள் தமிழ் நாட்டின்மீது படையெடுத்து வருகிருர்கள் என்ற செய்தி காட்டுத்தீப்போல நாட்டின் பல பாகங்களிலும் பரவிவிட்டது. எங்கே பார்த்தாலும் அதே பேச்சாகத்தான் இருந்தது. படையெடுப்பை எதிர்த்து வெற்றி கொள்வதற்குக் குடிமக்களுள் ஒவ் வொருவரும் தயாராக இருந்தனா.

அரசனும் அவனைச் சுற்றியிருந்த அமைச்சாகளும் படைத் தலைவர்களும் கவலைகொண்டு இருந்தார்களே யன்றி, நாட்டு மக்கள் அவ்விதம் இல்லை. சென்ற இரண்டு தினங்களாக எண்பேர் ஆயத்தாரும் ஐம் பெருங் குழுவினரும் கூடிக் கூடி ஆலோசனை செய் தனா. அவ்வப்போது அரசனும் உடனிருந்து தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தான்.

தங்கள்மீது யவனர்கள் படையெடுத்து வருவதற்குத் தாங்கள் இழைத்த தவறு என்ன என்பதே தமிழர்களுக்

குத் தெரியாது. முதலில் அவர்கள் படையெடுத்து வரும் செய்தியே தெரியாது.

அந்தச் செய்தியை முதல்முதலாகக் கொணர்ந்தவன் நாகன். இந்த வருஷம் அந்தோனியாவுக்கு உடல் நலம் இன்மையால் சாத்தன் கப்பலுக்குப் போகவில்லை; தனக்குப் பதிலாக நாகனையே அனுப்பியிருந்தான். நாகன் அலெக்ஜாந்திரியாவில் இருந்த காலத்தில் யவனர்கள் தமிழர்களுடன் போர் தொடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதை அறிந்தான்.

அந்தச் செய்தியைச் சாத்தனிடமும் பாண்டிய மன்னன் மாறன் செழியனிடமும் தெரிவிப்பதற்காக அவன் சீக்கிரமாகத் திரும்பிவிட்டான். ஏன், அலெக்ஜாந்திரியாவினின்றும் தமிழ்நாடு நோக்கிப் புறப்பட்ட படகுகளுள் நாகனுடைய படகே முதலாவதாகும்.

யவனர்கள் அப்போதுதான் தங்கள் மரக்கலங்களை அலெக்ஜாந்திரியாவின் துறைமுகத்தில் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். யவனப் போர்வீரர்களும் தமிழ்நாடு புறப்படுவதற்காகத் தங்கள் தங்கள் தலைவர்களுடன் அங்கே வந்து கூடிக்கொண்டிருந்தனர்.

அவர்கள் புறப்படுவதற்கு இன்னும் பதினைந்து தினங்களாவது ஆகும் என்பதை நாகன் நிச்சயம் செய்து கொண்டான். அன்றி அவர்கள் உடனே புறப்பட்டாலும் தங்களுடன் கூடவே கடலில் வர முடியாது என்பதையும் அவன் அறிவான். சாதாரண வியாபாரக் கப்பல்களை விடப் போர்க்கலங்கள் கடலில் மிதந்து பிரயாணம் செய்வதற்குச் சிறிது கால தாமதம் நேரிடும். எப்படியும் யவன வீரர்கள் வந்து சேருவதற்கு ஒரு மாத காலத்திற்கு முன்னரே அவன் தமிழ்நாடு சென்று அந்தச்

செய்தியை அறிவித்து விட முடியும். படையெடுப்பைத் தடுப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய அந்த ஒரு மாச காலம் போதாதுதான். எனினும் திடீரென்று அவர்கள் வந்து தாக்கிய பிறகு தெரிந்துகொள்வதைக் காட்டிலும் ஒரு மாசம் முன்னதாகத் தெரிந்துகொள்வதில் எவ்வளவோ அநுகூலம் உண்டு.

அணடியோகஸ் தலைமையில் யவனர்கள் யுத்தத்துக்குக் கிளம்பியதன் உண்மைக் காரணத்தை நாகன் ஊகித்து விட்டான். அந்தச் செய்தியையும் அவன் மெல்லச் சாத்தன் காதில் போட்டுவைத்தான். இந்த மர்மங்கள், சம்பந்தப்பட்ட சிலருக்கேயன்றி நாட்டு மக்களுள் வேறு ஒருவருக்கும் தெரியா.

தமிழ்நாட்டு வியாபாரத்தில் அநீதமான சில உரிமைகளை வேண்டியே யவனர்கள் போருக்கு எழுந்தனர் என்பது யாவரும் அறிந்த செய்தி. தமிழ் நாட்டில் மட்டுமன்றி யவன தேசத்திலும் அதே போலத்தான்.

மக்களின் மனஸ் தத்துவங்களுள் யுத்தத்தைப் பற்றியது தனியானது. போரிடும் இரு தரத்தாரும் தாமப் போர புரிவதாகவே கூறிக்கொள்வர். போர வீரர்களிடையே அந்த மனப்பான்மை இலலாவிடில வெற்றி கிட்டாது. ஆயினும் போரின் வெற்றி தோல்விகள் முதலில் எந்தப் பக்கத்திலே சாய்ந்தாலும் முடிவிலே தர்மத்துக்காகச் சண்டை செய்யும் கட்சியே வெற்றி அடையும். இதனை மக்களுக்குப் புறம்பான தெய்வ சக்தி என்று வேண்டுமானாலும் கூறலாம். உண்மையில் அது மக்களின் ஆத்ம சக்தியே.

தவிர, போர் புரியும் ஒவ்வொரு கட்சியின் திறமையும் அதற்குத் தலைமை வகித்து நடத்தும் தலைவனைப்

பொறுத்ததாக ஆகிறது. அவன் உத்தரவுகளை ஏற்று அவற்றைச் செய்து முடிக்கும் வீரர்கள் பலர் இருந்தாலும், அவற்றைச் சமயம் அறிந்து அளிக்கும் திறமை தலைவனுடையதே. அவனுக்கு உண்டாகும் நன்மையோ தீமையோ பெரிதும் போரின் முடிவைப் பொறுத்ததாய் இருந்துவிட்டாலோ? யுத்தத்தில் அவன் காட்டும் தீரமும் எப்படியாவது வெற்றி அடைய வேண்டும் என்று முனைந்து நிற்கும் அவன் உழைப்பும் சொல்லில் அடங்கா. யவனப்படைக்குத் தலைவனாக வந்த அண்டியோகஸைப் போலவே பாண்டியப் படைத்தலைமைக்கும் சாத்தன் தகுதி வாய்ந்தவன்.

தனக்கு அநுகூலமான வாய்ச்சொல்லைக் கேட்ட பிறகு மாறன் செழியன் சிறிதும் தாமதம் செய்யவில்லை. அஞ்சா நெஞ்சம் பெற்ற போர்வீரர்களைக் கொண்ட போதிய படைவலிமையும், செலவுக்கு முட்டுப்பாடின்றிச் சேமித்து வைக்கப்பட்டிருந்த தேவையான பொன்னும் உணவுப் பொருள்களும் இருக்கையில் அவன் எதற்காகக் கவலை கொள்ளவேண்டும்?

ஜோதிடம் வல்லார் கிரகநிலையைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். நிமித்திகர்கள் சகுனத்தை அறிந்தனர். யாவும் மன்னனுக்கு வெற்றி நிச்சயமாகக் கிட்டும் என்பதைத் தெரிவித்தன.

பாண்டியப் படைக்குத் தலைமை பூண்டு அதனை நடத்திச் செல்லும் அதிகாரியின் நியமனமே பாக்கி. அதைத் தீர்மானிக்கவே மன்னன் சாத்தனை வரவழைத்தான்.

நடுச்சபையில் சாத்தனுக்கு மன்னன் வெற்றிலையும் அடைக்காயும் எடுத்து வழங்கினான். அது உயர்ந்த

சம்மானம்: மன்னன் அவனிடம் வைத்துள்ள நம்பிக்கையை அது எடுத்துக் காட்டியதோடு, படைத்தலைமையை ஏற்ற அவன், அன்று முதல் மன்னனுக்குச் சமமான அந்தஸ்தைப் பெற்றுவிட்டான் என்பதையும் எடுத்துக் காட்டியது. கிடைத்தற்கரிய பெருமை பெற்ற சாத்தன் தன் நன்றியைத் தெரிவிக்கும் வகையை அறியாது மௌனமாக நின்றான்.

# ௭

# பாம்புக்குப் பால்

"தம்பி, அதோ பார், கரையருகே அந்தப் படகு கள் கவிழ்ந்துவிட்டன" என்முன் ஒருவன்.

"ஐயோ பாவம்! யாரோ வெளிநாட்டவர் போலத் தோன்றுகிறது. ஆழந் தெரியாமல் காலை யிட்டது போல, இடத்தை அறியாமல் இங்கே வந்து அகப் பட்டுக் கொண்டார்கள்" என்றான் மற்றவன்.

"கட்டுமரத்தைச் சீக்கிரம் தள்ளு. அவர்களுக்கு ஏதாவது உதவி செய்யலாம்" என்றான் முதலில் அவர்களைப் பார்த்தவன்.

விடியற்காலம்; சூரியன் அப்போது உதயமாக வில்லை. ஆனல் இருள் நன்றாகப் பிரிந்துவிட்டது. இரவில் மீன் பிடிக்க நடுக்கடலுக்குச் சென்றிருந்த பரவர்கள் மெதுவாகக் கரைக்குத் திரும்பிக்கொண் டிருந்தார்கள்.

அப்பொழுது கடல் கொந்தளித்துக்கொண் டிருந் தது. வானத்தில் மேகம் அதிகமாகக் காணப்படா விட்டாலும், எங்கிருந்தோ காற்று சூறவளிபோலக் கிளம்பி வேகமாக வீசி வந்தது. 'ஹோ' என்ற இரைச்சலுடன் அலைகள் ஆள் உயரம் கிளம்பிப் படகு களின் பக்கங்களை மோதி அசைத்தன; வெள்ளிய நுரையுடன் திரைகளைப் பாய் போலச் சுருட்டிச் சென்றன.

பிறந்தது முதல் கடலிலேயே வளர்ந்து உழன்று உயிர் வாழ்ந்த பரவர்கள் அந்தக் கொந்தளிப்பைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. அவர்கள் ஏறிச் சென்ற கட்டுமரங்கள் என்னவோ நீருள் மூழ்கா. சிறு தடுப்புகளைக்கொண்டு அவர்கள் அவற்றைச் சுலபமாகச் செலுத்தி எப்படிப்பட்ட அலையையும் தாண்டிவிடுவர். அந்தப் பக்கத்தின் ஒவ்வோர் இடமும் பருவநிலையும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் அங்கே வந்து அகப்பட்டுக்கொண்ட படகுகளோ நிலைகொள்ளாமல் தத்தளித்தன. கரை சமீபத்திலேதான் இருந்தது. அதனாலேயே அலைகளின் வேகம் அதிகமாக இருந்தது. அலையும் காற்றும் படகுகளை அலைக்காமல் இருக்க மாலுமிகள் பாய்களை அவிழ்த்து விட்டார்கள்; படகுகளைக் கவிழவொட்டாமல் தடுக்கத் தங்களால் கூடிய வரையில் முயன்றார்கள். என்றாலும் அவர்கள் முயற்சி பலிக்கவில்லை.

நீரில் முழுகிய அவர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு கரையை அடைய வேண்டி மூச்சைப் பிடித்துக்கொண்டு நீந்தினர். பல பேர் அலைகளுக்கு அடியில் புகுந்து உடலை வளைத்துக் கொடுத்து அவற்றின் அடியினின்றும் தப்பப் பார்த்தனர். அவர்களுக்கு அந்த இடத்தின் இயற்கை தெரியாதது ஓர் இடையூறாகவே நின்றது. அவர்களால் சமாளிக்க முடியவில்லை. கை ஓய்ந்துவிட்டது.

தக்க சமயத்தில் பரவர்கள் அங்கே வந்து அவர்களுக்கு வேண்டிய உதவி யளித்தனர். நீரில் மிதப்பவர்களைத் தேடிப் பிடித்துக் கரைக்கு இழுத்து வந்தனர். கடல் நீரைக் குடித்து உணர்விழந்தவர்களைத் தங்கள்

முதுகின் மீது தூக்கிக் குலுக்கினார்கள்; அவர்களைத் தலை கீழாகப் பிடித்து நிறுத்தியும் சக்கரம் சுற்றியும் உட்கொண்டிருந்த நீரை வெளிப்படுத்தி உயிர்ப்பித்தனர்.

தாங்கள் யாருக்கு இவ்விதம் உதவி செய்கிறோம் என்பதைப் பரவர்கள் அப்போது அறியவில்லை எனினும் அதனை அவர்கள் அறிந்திருந்தாலும் உதவியளிக்கமறந்திருக்க மாட்டார்கள். கஷ்டப்படுகிறவர்களுக்குக் கை கொடுத்து அவர்களைத் தூக்கி விட வேண்டியது மனிதனைப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் கடமை என்பதைப் பரவர் நிச்சயமாக நம்பி வந்தவர்கள்.

இவ்விதம் தமிழ் நாட்டின் தென்புறத்தே பரவர் வாழும் கடற்கரையில் ஒரு சிற்றாருக்கு அருகே கரையேறியவர்கள் யவனப் போர்வீரர்கள்; அண்டியோகஸ் நடத்தி வந்த யவனப் படையைச் சேர்ந்தவர்கள். தங்கள் தேசத்தை விட்டுப் பல காத தூரம் கடலில் வந்த அவர்கள் எல்லோரும் தமிழ் நாட்டில் ஒரே இடத்தில இறங்கவில்லை. தங்களைப பல பகுதியினராகப் பிரித்துக்கொண்டு கடற்கரையோரமாகப பல வேறு இடங்களில் இறங்கச் சென்றனர்.

அவர்களுள் முதல் முதலாகக் கரையை அடைந்த கோஷ்டி இது. இவர்கள் கடலில் மூழ்கியதையும் பரவர்கள் உதவி செய்ததையும் மற்றவர், தூரத்தில செல்லும் போது கவனித்துக்கொண்டேதான் இருந்தார்கள். சூறுவளியால் கொந்தளித்த அந்த ஜலத்திலே தங்கள் கலங்களையும் செலுத்திக் தாங்களும் அவர்களைப்போல் கஷ்டப்பட மற்றவர்கள் இஷ்டப்படவில்லை. ஆகவே சிறிது தூரம் சென்று வேறோர் இடத்தில் இறங்கித்

தரை மார்க்கமாக இவர்களுடைய உதவிக்கு வரலாம் என்றே எண்ணினார்கள் போலும்!

எனினும் இந்நிகழ்ச்சி அவர்கள் மனத்தே ஒரு கலக்கத்தை உண்டுபண்ணிவிட்டது. இதனை அவர்கள் தங்களுக்கு நேரிட்ட அபசகுனமாகவே கருதினர். வெண்ணெய் திரளும் சமயத்தில் தாழி உடைந்து விடுமோ என்று பயந்தனர். எவ்வாறாயினும் முன் வைத்த காலைப் பின் வைக்கலாமா?

பரவர்களோ தங்கள் ஊர்ப்புறத்தே கலம் உடைந்து நீரில் மூழ்கியவர்கள் யவனர்களே ஆவார்கள் என்பதை நன்கு அறிவர். ஆனால் வழக்கம்போல வாணிகம் செய்ய வந்தவர்களே என்று அவர்கள் எண்ணினர். யவனர்களும் தாங்கள் போருக்கு எழுந்தவர் என்பதை முதலில் காட்டிக் கொள்ளவில்லை. கடலில் மூழ்கிய தோணிகளுடன் அவர்களுடைய போர்க்கலங்களும் போயின.

ஊருக்குள் நுழைந்த பிறகுதான் அவர்களுடைய உண்மை உருவம் வெளிப்பட்டது. அன்றைத் தினம் பொழுது சாய்வதற்குள் பக்கத்து ஊரிலிருந்து தரை மார்க்கமாக மற்றொரு கோஷ்டியாரும் அவர்களுடைய உதவிக்கு வந்துவிட்டனர். நீருள் மூழ்கி அவர்கள் இழந்தவற்றுக்குப் பதிலாகப் புதிய படைகளும் அவர்களுக்குக் கிடைத்துவிட்டன.

அவர்கள் அதற்குப் பிறகு செய்த அட்டகாசத்தையும் இழைத்த இன்னல்களையும் விவரித்துக் கூற முடியாது.

சேரியின் முக்கியமான இடங்களையும் நல்ல குடிசைகளையும் தங்களுக்கென யவன வீரர்கள் கைப்பற்றிக்

கொண்டனர். உணவுப் பொருள்களை வேண்டியபடி அள்ளிக்கொண்டு சென்றனர். அவற்றுக்கு உரிய விலையைக் கொடுக்க மறுத்தனர். அப்படி எவனாவது தைரியமாக முன் வந்து விலையைக் கொடுத்துவிட்டே அவற்றை எடுக்க வேண்டும் என்று கூறினானாகில் அவனைப் பிடித்துப் படாத பாடு படுத்தித் துன்புறுத்தினார்.

அவர்கள் நடத்திய அட்டூழியங்களுக்கும் பெண் சோரங்களுக்கும் அளவே இல்லை.

பரவர்களும் இதனைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கவில்லை. மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் போலக் கௌரவத்தையும் மானத்தையும் இழந்து உயிர் வாழ்வது எதற்காக? தங்களுக்கு நேரிட்ட இடுக்கண்களையும், தங்கள் பெண் மக்களுக்கு நேர்ந்த இன்னல்களையும் அகற்றுவதற்கு அவர்கள் சிறிதும் தயங்கவில்லை.

தாங்கள் யாரை முதலில் காப்பாற்றி உயிர்ப் பிச்சை அளித்தார்களோ அவர்களோடு பின்னால் போரிட்டு அவர்களை வதைப்பதைப் பரவர்கள் நியாயமாகக் கருதவில்லை. 'தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்லலாம்' என்கிறது தர்ம சாஸ்திரம். அதனோடு செய்ந்நன்றி மறந்த பேதைகளை வதைப்பதில் சிறிதும் பாவம் இல்லை. எனினும் இயற்கையோடு ஒன்றி, எளிய வாழ்க்கை நடத்திவந்த பரவர்களுடைய மனோபாவம் இரக்கத்தை அதிகமாகக் கொண்டிருந்தது. அவர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொண்டார்களே யன்றி எதிர்த்தவர்களைத் தாக்கி முறியடிக்க முற்படவில்லை.

இந்தச் செய்தியைக் கேட்டவுடன் பாண்டிய மக்கள் மிகுந்த பரபரப்பை அடைந்தனர். அவர்கள் அதனை

முதலில் நம்பவில்லை. 'யவனர்கள் இவ்வளவு சீக்கிரமாகத் தமிழ்நாட்டில் வந்து இறங்கி, ஊர்களைக் கைக்கொண்டு சூறையாட ஆரம்பிப்பது எவ்விதம் சாத்தியமாகும்?' என்றே சந்தேகித்தனர். எனினும் உண்மையை அறிந்தவுடன் அவர்கள் பரபரப்பு நீங்கி அதற்குப் பதிலாக ஆத்திரமும் கோபமும் கொண்டனர்.

உலகத்திலேயே சிறந்த வீரமும் புகழும் பெற்று, செல்வாக்குடனும் பெருமையுடனும் வாழும் தங்கள் மீது படையெடுத்து வர யவனர்களுக்கு ஏற்பட்ட தைரியத்தைக் கண்டு அவர்கள் வியந்தனர். எவ்விதமாயினும் அவர்களைத் தமிழ்நாட்டில் தலையெடுக்க வொட்டாமல் அடக்கித் துரத்திவிட வேண்டுமென்றே முடிவு செய்தனர்.

கடற்கரையோரமாகப் பல இடங்களிலும் யவனர்கள் இறங்கிவருகிறார்கள் என்பதைக் கேட்கச் சுதந்தரம் வாய்ந்த எந்தத் தமிழன் உள்ளந்தான் குமுறாது? முடியுடைய மன்னர்களில் ஒருவனை தமிழ் வேந்தனைத் தவிர வேறு யாரையும் என்றைக்கும் வணங்கியறியாத அவர்கள் யவனர்களுக்குக் கீழ்ப்படிந்து ஒடுங்கிவிடுவாரோ? இந்த ஆக்கிரமிப்பைத் தடுக்காமல் விட்டுவிட்டால், தங்கள் ஒவ்வொருவருடைய சர்வ சுதந்தரங்களும் போய்விடும் என்பதையும், அப்பால் தாங்களும், தலைமுறை தலைமுறையாகத் தங்கள் வழி வந்தவர்களும் சொந்த நாட்டிலேயே பிறருக்கு அடிமையாக வாழ வேண்டும் என்பதையும் அவர்கள் அறிவர்.

யவனர்கள் தங்களுக்கென ஒரு நீதியையும், தாங்கள் கைக்கொண்ட பிரதேசங்களில் இருந்த குடிமக்களுக்கென மற்றொரு வகை நீதியையும் வழங்குவது, தமிழ்

மக்களுக்குத் தெரியாததன்று. யவனனுகப் பிறந்த ஒரு வன் தன் ஸாம்ராஜ்யத்திற்கேயன்றி வேறு எதற்கும் யாருக்கும் அடங்கியவன் அல்லன். அவனைப் பிறர் ஒன்றும் செய்ய முடியாது. அவனைச் சிறை வைக்கவோ அவன் இழைத்த குற்றத்திற்குத் தக்க தண்டனை அளிக்கவோ யாருக்கும் உரிமை கிடையாது. ஆனால் அவனுக்கோ தன் நாட்டின் அதிகாரத்தை எந்த இடத்திலும் நிலைநாட்ட, எத்தகைய முறையை வேண்டுமானலும் கையாள உரிமை உண்டு. குலத்துக்கு ஒரு நீதி வழங்கும் இதனை யார் தாம் பொறுப்பர்?

# 10

## மானமே பெரிது

ஆண்மகனாய்ப் பிறந்த ஒவ்வொரு தமிழனும் தன் தாய்நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்ற முன்வந்தான். யவனர்களை முறியடித்துத் துரத்திவிட்டே வேறு காரியம் பார்ப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டான். ஆம், தன் வாளையும் வேலையும் எடுத்துச் சாணை பிடித்துத் தீட்டித் தயார் செய்துகொண்டான். வில்லைப் பதம் பார்த்து, நாண பிடித்துக் கயிற்றைப் புதுப்பித்து அம்புகளைத் தூணியில் தொகுத்து வைத்தான். போர்முனைக்குப் புறப்படுவதற்கு வேண்டிய ஆயுதங்கள் யாவற்றையும் செய்துவந்தான்.

அரசனது ஆணையும் அதற்குள் பறந்து வந்தது. அதனைச் சேரிதோறும் ஊர்தோறும் பறையறைந்து அறிவித்தார்கள். "தாய்க்கு ஒரு மகன், பிள்ளைப்பேறு கிடையாதவன், பாலப்பருவம் நீங்காதவன், மூப்பு அடைந்தவன் ஆகியோரைத் தவிர மற்ற எல்லா ஆண்மக்களும் போருக்குப் புறப்பட வேண்டும்" என்பதே அதன் சாராம்சம்.

அது மட்டுமன்று; மற்றொன்றும் தொடர்ந்து வந்தது. கரையேறிய யவனர்களைத் துரத்தியடிப்பதற்குத் தீவிரமான போர் நடக்கக்கூடிய இடமான கடற்கரைப் பிரதேசத்தைக் காத தூரத்துக்குக் காலி செய்துவிட வேண்டும் என்பது அது.

கூன், குருடு, செவிடு முதலிய அங்கஹீனர்கள், குழந்தைகள், கிழவர்கள், இளம் பெண்கள், போர் முனைக்கு வராத ஆடவர் ஆகியோர் அந்தப் பிரதேசத்தை விடுத்துத் தக்க பாதுகாப்புள்ள மறைவிடத்துக்குச் சென்று ஒதுங்க வேண்டும். அவர்கள் போர்க்களத்துக்குச் சமீபமாகத் தங்குவதால் போரிடுவோர்க்கு இடையூறுகள் உண்டாகுமேயன்றி உதவி ஏதும் கிடைக்காது. வீரன் போரைக் கவனிப்பானா, அகதிகளான அவர்களைக் கவனிப்பானா?

மக்களோ தலைமுறை தலைமுறையாக வாழ்ந்துவந்த அந்தப் பிரதேசத்தை விட்டு வேற்றிடம் சென்று சிறிது நாள் தங்குவதற்குக் கொஞ்சமும் வருத்தப்படவில்லை அதனால் நாட்டுக்கு ஏற்படும் மகத்தான நன்மையைக் கருதித் தாங்கள் அநுபவிக்க நேரிட்டுள்ள சிறு கஷ்டங்களைப் பொருட்படுத்தவில்லை.

ஊரை விட்டுச் சென்ற ஒவ்வொருவரும் தாங்கள் சுமக்கக் கூடிய அளவு பண்டம் பாடிகளையும், உணவுப் பொருள்களையும் தூக்கிச் சென்றனர். மிகுந்தவற்றைப் பிறர் அறிய முடியாதபடி பத்திரப்படுத்தி வைத்தனர். பூமியிலே பள்ளம் தோண்டிப் புதைத்தனர். கலாபம் நீங்கிச் சொந்த ஊருக்குத் திரும்பிய பிறகு அவற்றை எடுத்துக் கொள்ளலாம் அன்றோ?

நாடு இவ்விதம் போருக்குத் தயார் செய்துகொண்டிருக்கையில் மதுரையில் பாண்டிய மன்னனான மாறன் செழியனும் சும்மா இருக்கவில்லை. நிமித்திகர்களை அழைத்து வந்து நல்ல நாளைக் குறித்துச் சொல்ல வினவினான். அவர்களும் கிரகங்களை ஆராய்ந்து பார்த்தனர்.

போரில் வெற்றி கொள்ளப் புறப்படுவதற்கு அப்போதே நல்ல வேளையாக இருந்தது.

"அரசே, இந்த முகூர்த்தமே நல்ல வேளையாக இருக்கிறது. இது தவறினால் இன்னும் பதினைந்து நாட்களுக்கு இதைப்போன்ற நன்னிமித்தம் கொண்ட வேளை கிடைக்காது" என்று எல்லோரும் ஒருமுகமாகத் தெரிவித்தனர்.

"அப்படியானால் இந்த நல்லோரையில் நம் சின்னமாக இந்த வாளை அனுப்பி வைப்போம்" என்று கூறிய மன்னன் தன் உடைவாளை உருவி அப்போதே பக்கத்தில் இருந்த காவலனிடம் அளித்தான். காவலனும் அதனைச் சிரமேல் தாங்கி வெளிக்கிளம்பினான். மங்கலப் பெண்டு எதிரே வர, நற்சகுனம் கண்டு உள்ளத்தே உவகை பூத்த மன்னன் அரண்மனை வாசலில் யானைமீது ஏறி அமர்ந்தான். அவ்விடத்திலிருந்து நகரை வலமாகக் கொண்டு கிழக்குத் திக்கை நோக்கிப் புறப்பட்டான்.

வாளைப் 'பரஸ்தானம்' அனுப்பிய மன்னன் மறு நாளே தானும் நேரில் போருக்குக் கிளம்பப் போவதாக நகரில் வீரமுரசு கொட்டிச் செய்தியை அறிவித்தான். அவர் அவர் தங்கள் படையுடன் ஒருவார காலத்துக்குள் தன்னை வந்து அடையவேண்டுமென்று குறுநில மன்னர்களுக்கும் வேளிர்களுக்கும் ஓலை போக்கினான். அப்போது தலைநகரமே ஒரு படைவீட்டைப் போல மாறிக் காட்சி அளித்தது.

சாத்தனை செய்யும் வகை அறியாமல் தவித்தான். பாண்டிய சேனையின் தலைமைப் பதவியை மன்னன் அவனுக்கு வழங்கிவிட்டான். அவன் போருக்குக் கிளம்பாமல் இனித் தாமதிக்க முடியாது. ஆனால் அவன்

அருமையான மனைவி அந்தோனியாவோ வீட்டில் படுத்த படுக்கையாகக் கிடந்து வந்தாள். யவன வைத்தியனை மார்க்கஸ் கூறியபடி அவளை நகரத்தினின்றும் வேற்றிடத்திற்கு அழைத்துச் சென்றும் அவள் உடல்நலனைக் கவனிக்க அவனுக்குப் பொழுது கிடைக்கவில்லை.

ஆனால் அந்தோனியாவோ அதைப்பற்றிச் சிறிதும் சிந்தை கொள்ளவில்லை. சாத்தனுடன் போர் முனைக்குக் கிளர்புவதற்கும் அவள் தயாராக இருந்தாள்.

"என்ன? இந்த நிலையில் உன்னைப் போர்க்களத்துக்கு அழைத்துச் செல்லவா? ஒருகாலும் முடியாது" என்று கண்டிப்பாக மறுத்துவிட்டான் சாத்தன்.

யுத்தத்துக்குச் செல்லுங்கால் பெண் மக்களையும் அழைத்துச் செல்வது தமிழர்களுக்குப் புதிதன்று. வீரத் தாய்மார்களும் வீர பத்தினிகளும் என்றும் போரைக் கண்டு பயப்பட்டதில்லை. அவர்கள் போர்க்களங்களில் புகுந்து வீரர்களுக்கு உற்சாக மூட்டித் தைரியம் அளித்து உதவி வந்தனர். அம்மட்டிலோ? போரில் விழுந்தவர்களை ரணகளத்தினின்றும் வெளியே தூக்கி வந்து காயங்களுக்கு மருந்திட்டுக் கட்டிப் புண்ணாற்றி, வீரர்கள் மனத்தே சோர்வு தோன்றாதவாறு அவர்களை எப்போதும் பராமரித்தனர்.

சாத்தன் இதனை நன்கு அறிவான். ஆனால் இவை யாவும் அந்தோனியாவுக்குப் புதியவை. அன்றி, சென்ற ஆறுமாசங்களாக அவளுக்கு உண்டாகியிருந்த மனப் புண் போர்க் களக் காட்சியால் அதிகமாகிவிடவும் இடம் ஏற்படும். அவளுடைய நாட்டவர்களான

யவனர்கள் யுத்தத்தில் அடிபட்டு மாண்டு போவதைக் காண அவள் உள்ளம் துடிக்கக்கூடும். அதற்காகவே சாத்தன் அவளைத் தடுத்தான்.

"ஏன், வைத்தியர் தாம் சொல்லிச் சென்றாரே, 'இட மாற்றத்தால் ஒருவேளை வியாதி குணம் காணலாம்' என்று. தங்களுடன் அங்கே வந்து இயற்கையின் மத்தியில் வாழ்ந்தால் வெகு சீக்கிரம் உடல் நிலை சீராகிவிடும் என்றே எண்ணுகிறேன்" என்று திடமாகச் சொன்னாள் அவள்.

கரையில் எறிந்த மீனைப் போல உணர்வற்றுக் கிடந்த அந்தோனியா மீண்டும் தன் நாட்டவர்களைக் காணும் பாக்கியம் தனக்குக் கிட்டுமா என்றே ஏங்கிக் கிடந்தாள். அதற்கு ஏற்ற சந்தர்ப்பம் வாய்த்துள்ள போது அதை நழுவ விடுவாளா?

அவளுக்குத் தமிழ்நாட்டு வாழ்க்கை சலித்துவிட்டது. வந்த புது மோகத்தில் அவள் அந்த வாழ்க்கையை நன்றாக ரஸித்து அநுபவித்தாள். ஆனால் நாளாக ஆக அது தன்னுடைய இயற்கைக்கு ஒவ்வாதது என்பதைச் சிறிது உணர்ந்தாள். எனினும் அதில் தனக்கு ஒரு விதமான சலிப்பும் வெறுப்பும் ஏற்பட்டு விட்டன என்பதை அவள் அறிந்துகொள்ளவில்லை. சாத்தனுக்கும் அது தெரியவில்லை.

எனினும் அவள் உள்ளத்தே ஏற்பட்டிருந்த ஓர் ஏக்கம் அவளை வெளிக் கிளம்பத் தூண்டியது.

சாத்தன் அவளைத் தடுக்க எவ்வளவோ நல்ல வார்த்தைகள் சொல்லிப் பார்த்தான். அவை ஒன்றும் பலன் அளிக்கவில்லை. அவள் ஒரே பிடிவாதமாக இருந்தாள்.

# 11

# மனக் கசப்பு

அந்தோனியாவுக்குத் தலை சுழன்றது. என்ன செய்வது என்பதை அறியாமல் அவள் திகைத்து நின்றாள். பாசம் அவள் மனத்தை இரு புறங்களிலும் இழுத்து அலைத்தது. செயலற்று, உணர்வற்றுக் கல்லாய்ச் சமைந்து நின்ற அவளது வெறித்த பார்வை எதையும் கவனிக்கவில்லை. அவள் உள்ளம் எங்கோ வெட்ட வெளியில் சஞ்சரித்துக்கொண்டிருந்தது. அதனிடையே தோன்றிய எண்ணங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் ஓடி மறைந்தன.

'திடுக்'கென்று அவளைத் தூக்கி வாரிப் போட்டது. தூரத்தில் கிளம்பிய சப்தம் - முரசொலி - அவளுக்குப் புதியதன்று. அதைக் கேட்டுக் கேட்டு அவள் பழக்கப்பட்டிருக்கிறாள். ஆயினும் அன்று அது அவளுக்குப் புதிதாகவே கேட்டது. அது அவள் மனத்தை, எரியும் நெருப்பைப் போலச் சுட்டது.

சூரியன் அஸ்தமித்து வெகு நேரமாகி விட்டது; ஒரு ஜாமப் பொழுது இருக்கும். ஆயினும் பால் போன்ற வெண்ணிலவு சுற்றிலும் காய்ந்துகொண்டிருந்தது. சகல ஜீவராசிகளும் இன்பத்தை அநுபவித்து ஆனந்தத்தில் மூழ்கியிருந்தன. ஆனால் அவள் மட்டும் துன்பப்பட்டு வாடி உள்ளம் நைந்து கிடந்தாள். அவள் மட்டுந்தானா? இல்லை. அவளைப் போல இன்னும் இரண்டொருவரும் அவ்விதமே வருந்திக் கிடந்தனர்.

தன் ஒருத்திக்காக இத்தனை பேர்கள் மாண்டு மடிவதைக் காண அவளுக்குப் பொறுக்கவில்லை. இருதயம் உடைந்து போயிற்று. ரத்த பாசம் பொல்லாதது. அதனை உதறித் தள்ள யாராலும் முடியாது. பிறந்தது முதல் அவள் யாரிடையே வளர்ந்து குலவி வாழ்ந்து வந்தாளோ, அவர்களைத் தனக்காகப் பலியிட அவள் மனம் ஒருப்படவில்லை.

அன்றி, அவ்விதம் அவர்களைப் பலி கொடுப்பதால் அவளுக்கு என்ன லாபம்? அவளுக்கோ தமிழ் நாட்டு வாழ்க்கை அலுத்துப் போய்விட்டது. இங்கே தான் தனியாக இருப்பதாகவே அவள் எண்ணி விட்டாள். எங்கே திரும்பினாலும் எல்லோரும் தன்னைச் சுட்டிக் காட்டி ஏதோ ரகசியம் பேசுவதாகவே அவள் உள்ளத்தில் ஓர் உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது.

அவ்வளவையும் யாருடைய அன்பை நிலை நிறுத்துவதற்காக அநுபவித்து வந்தாளோ அந்தச் சாத்தனே அவளிடம் சலிப்புக் கொண்டுவிட்டானாகில் அப்பால் அவள் எதற்காக அவற்றைப் பொறுக்கவேண்டும்? தன்னிடம் சாத்தன் முன்போல அன்பு பூண்டிருக்கவில்லை என்ற பிரமை அவளுக்கு ஏற்பட்டுவிட்டது.

இல்லாவிட்டால் அவன் அன்றொரு நாள் தன்னைக் கடிந்து கொள்ள வேண்டிய காரணம் இல்லையே என்றும் எண்ணினாள்.

சாத்தன் அந்தோனியாளை ஒரு சமயம் கடிந்து கோபித்துக்கொண்டது உண்மைதான். அது அவன் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடக்க ஆரம்பித்த புதிதில் நடந்தது. எந்த வைத்தியத்தாலும் அவனுக்குக் குணம் ஏற்படாமல் போகவே, அவள்

படுக்கையில் புரண்டு தன் உடம்பை அலட்டிக்கொண்டாள். அவளைப் பார்க்க வந்த அரண்மனை வைத்தியரிடமும் சரியாக முகம் கொடுத்துப் பேசவில்லை.

“நீ இப்படி அடம் செய்தால் உன் உடம்பு எதற்கு ஆகும்? எப்படித்தான் வைத்தியம் செய்வது? படுத்த படுக்கையாக உன்னை வைத்துக்கொண்டு எவ்வளவு நாள்தான் நான் பணிவிடை செய்ய முடியும்?” என்று சாத்தன் கோபித்துக்கொண்டான்.

அதை அந்தோனியா விகற்பமாக எண்ணிவிட்டாள். சாத்தன் மனத்தே அடங்கிக் குமுறிய பாசத்தையும் வருத்தத்தையும் அவள் உணரவில்லை. அவன் தன்னை வெறுக்கத் தலைப்பட்டான் என்றே நிச்சயித்துவிட்டாள். அது அவள் இருதயத்தைச் சிறுகச் சிறுக அரித்து வரலாயிற்று.

இப்போது அவள் உள்ளம் உணர்ச்சியற்ற வெறும் ஓடாகவே இருந்தது. தன் ஜீவ சக்தியை இழந்து நின்றது. இவற்றையெல்லாம் உதறித் தள்ளி மறுபடியும் தன் தேசத்து மக்களைக் கண்டு அவர்களுடன் கலந்து வாழவே அவள் மனம் ஏங்கியது.

இரவுப் பொழுது ஏறி வருவதை அவள் கொஞ்சமும் கவனிக்கவில்லை. சாத்தனும் போர்க்களத்திலிருந்து பாசறைக்குத் திரும்பி வரவில்லை. அதையும் அவள் சிந்தித்துப் பார்க்கவில்லை.

தமிழ் நாட்டார் சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகு போர் புரியும் வழக்கம் கிடையாது. அன்று விபரீதமாக முன்னிரவிலும் போர் நீடித்துவிட்டது. வெற்றிகிட்டும் சமயத்தில் போரை நிறுத்த யாருக்குத்தான் மனம் வரும்!

அன்றைத் தினம் பாண்டிய சேனை மிகுந்த ஆரவாரத்துடன் யுத்தம் செய்து வந்தது. ஒவ்வொரு வீரனுக்கும் போரில் தனக்கு வெற்றி கிட்ட வேண்டும் என்ற எண்ணம் ஒன்றைத் தவிர வேறு ஏதும் கிடையாது; கவலையும் இல்லை.

பாண்டிய மன்னன் போருக்கு எழுந்த செய்தியை அறிவிக்கும் முரசொலி கேட்டவுடனே ஒவ்வொருவனும் போர்க்களத்துக்குப் புறப்படத் தயாரானான். குடும்பத்துக்கு ஒருவன் வீதம் தலைக்கட்டுப் போட்டு யாவரும் ஒன்றாகக் கூடிப் புறப்பட்டு அரசனை அடைந்தனர்.

ஆண்மகனாகப் பிறந்த ஒவ்வொருவனுக்கும், அவன் எந்தத் தொழிலை நடத்துபவனாக இருந்தாலும் வில், வேல், வாள் முதலிய படைக்கலங்களைத் தாங்கிப் போரிடும் பயிற்சி இருந்துவந்தது.

'ஈன்று புறந்தருதல் தாயாருக்குக் கடன்; சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன்; வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குக் கடன்; நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடன்; ஒளிறு வாள் அருஞ் சமம் முருக்கிக் களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடன்.'-இதுவே தமிழ் மக்களின் வாழ்க்கைத் தத்துவம். அது மட்டுமன்று. போருக்கு எழுந்தால் வெற்றி கொண்டல்லாது திரும்புவதில்லை என்ற விரதத்தையும் பலர் பூண்டிருந்தனர்.

அண்டியோகஸ் அலெக்ஜாந்திரியாவை விட்டுக் கிளம்பியபோது எதிர்ப்பு இவ்வளவு பலமாக இருக்கும் என்பதை எண்ணவில்லை. தன் முன்னோர்கள் எகிப்து

நாட்டு டாலமிகளையும், ஆசிய யூதர்களையும் வெற்றி கொண்டதே போலச் சுலபமாகத் தானும் தமிழர்களை வென்று அடக்கிவிடலாம் என்ற மனப்பால் குடித்திருந்தான்.

அவன் ஆசை அழிந்தது. வெற்றியோ எளிதில் கிடைப்பதாகத் தோன்றவில்லை. நாள் ஆக ஆக, அவன் மனத்தில் அதைரியமும் கொஞ்சம் கொஞ்சமாக முளைத்துத் தழைத்தது. அபசகுனம் போல் அவர்கள் முதல் முதலாகக் கரையேறிய சமயத்தில் படகு கவிழ்ந்தது அவன் மனத்தை விட்டு அகலவே இல்லை.

போரில் வெற்றி தோல்வி ஏற்படுவதற்கு அதனைத் தலைமை பூண்டு நடத்துபவன் உள்ளத்தே ஏற்படும் உணர்ச்சியே பிரதான காரணம். ஏதாவது ஓர் அற்பக் காரணத்தால் அவன் மனத்தே பிரமை உண்டாகிவிட்டால், அப்பால் எது நடந்தாலும் அவன் அந்தக் காமாலைக் கண்ணாலேயே அதனைப் பார்ப்பான். எதைப் பார்த்தாலும் சந்தேகம் உதிக்கும்.

அன்றி, தான் போருக்கு எழுந்தது நியாயமாகுமா என்பதை அவன் ஆர அமர இருந்து யோசித்துப் பார்த்தவுடன், அவன் தமிழ்நாட்டவர்களுக்கு இழைத்த தீங்கு பன்மடங்கு பெரிதாகி அவனது மனக்கண் முன்னே காட்சி யளித்தது. அவன் தமிழ்நாடு வந்து சேர்ந்து நான்கு மாச காலம் ஆகிவிட்டது. பருவ நிலை மாறும் காலமும் வந்து நெருங்கியது. காற்று, திசைமாறுவதற்குள் ஏதாவது ஒன்று முடியவேண்டும். இல்லாவிட்டால் அவன் அங்கே அகப்பட்டுக்கொண்டு மழை வரும் வரையில் அவதிப்பட நேரிடும்.

இந்தக் குறுகிய காலத்திலேயே பாண்டிய சேனை தங்களைப் படாத பாடு படுத்தியதை நினைத்து உள்ளம் கலங்கினான் அண்டியோகஸ்; அவன் உடல் சிலிர்த்தது. தமிழ்நாட்டு மக்கள் போரில் இவ்வளவு வேகம் கொண்டவர்களாக இருப்பார்கள் என்பதாவது, விரோதிகளை முறியடித்து வெருட்டுவதில் குஞ்சு குழந்தைகளும், கிழவர்களும் கலந்துகொள்வார்கள் என்பதாவது அவனுக்குத் தெரியாது.

யவனர்கள் கரையேறிய இடங்களில் பக்கத்தே காத தூரத்துக்கு ஜன சஞ்சாரமே இல்லாத பாலைவனம் போல ஆகிவிட்டது. அங்கே வாழ்ந்து வந்த அத்தனை மக்களும் தங்கள் உடைமைகளைத் துறந்து வெளியேறியதைப் பார்த்து அவன் உண்மையில் வியந்தான். யவனர்களுக்கு ஆகார வசதி அளிக்கக் கூடிய ஒருவனாவது அந்தப் பிரதேசத்தில் இருந்தால்தானே?

பாழடைந்த குப்பங்களையும் சேரிகளையும் கொள்ளையிட்டாலும் அவர்களுக்கு என்ன கிடைத்தது? உடைந்த சட்டிகளும் கிழிந்த துணிகளுமே; உணவுப் பொருள்களில் ஒன்றுமே கிடைக்கவில்லை. ஆற்றில் கரைமேல் வழிந்து தண்ணீர் ஓடும் அந் நாளில் குளம், குட்டை ஒன்றிலும் கொஞ்சங்கூடத் தண்ணீர் இல்லை. ஒன்றிரண்டு இடங்களில் பள்ளங்களிலே தேங்கியிருக்கும் தண்ணீரும் வாயில் வைக்க யோக்கியதை அற்றதாக இருந்தது. நாட்டுமக்கள், தாங்கள் புறப்பட்டுப் போவதற்கு முன்னதாகவே, அழுகிய பண்டங்களைப் போட்டு [illegible] கெடுத்துவிட்டனர். போரில் வெற்றி கொள்வதைவிட வயிற்றுப் பசியை ஆற்றிக்கொள்வதே சிரமமானதாகப் போய்விட்டது யவன வீரர்களுக்கு.

தமிழ் நாடு ஓர் அன்ன சத்திரம். பசித்து வந்தவர்களுக்குச் சோறு இல்லை என்று எந்நாளும் சொன்னதில்லை; ஆனால் அதனை அவன் யாசித்துப் பெற வேண்டுமே அல்லாமல் அதிகாரத்துடன் பிடுங்கித் தின்ன முடியாது. அவ்விதம் செய்வதை மக்கள் என்றைக்கும் ஒப்ப மாட்டார்கள்.

அண்டியோகஸ் தன் படையைக் கடற்கரையினின்றும் கிளப்பி உள் நாட்டுக்கு நடத்திச் சென்றான். வயிற்றுப் பிணியை ஒழிக்க வேறு வழி இல்லை.

சிவந்த உடல்; தோளிலிருந்து முழங்கால் வரையில் மறைத்து நின்ற பாவாடை போன்ற வெள்ளை உடை; தலையிலே பின்புறத்தை மறைத்து, உச்சியில் பொற்பூவைக் கொண்ட தொப்பி; இடது கையில் பித்தளைக் குமிழுடன் கூடிய கேடயம்; வலது கையில் உருவிய கத்தியோ ஈட்டியோ அல்லது கோடரியைப் போன்ற படைக்கலமோ, ஒன்று; இவ்வித அலங்காரத்துடன் அணி அணியாக யவன வீரர்கள் கிளம்பிச் சென்றதைப் பார்த்து மகிழ ஒருவரையும் காணவில்லை.

ஆனால் பக்கத்தே ஒருவரும் இல்லாமல் இல்லை. பாண்டிய வீரர்கள் அவர்களை முன்னேறிச் செல்லாதவாறு தடுத்துவந்தனர். பாண்டிய சேனையைச் சேர்ந்தவர்களுக்குத் தனியாக அலங்காரம் ஒன்றும் இல்லை.

விரிந்த மார்பு; பரந்த தோள்; திரண்டு உருண்ட அவயவங்கள்; முறுக்கிய மீசை; ரத்தம் தெறிக்கும் கண்கள்; கறுத்த உடலை ஒத்து அதே நிறத்தில் இடையில் கட்டுச் சல்லடம்; கொண்டையில் பூமாலை; இவ்வளவுக்கும் மேலாக மேனியில் ஒரு பளபளப்பு. போரில் எதிரிகள் தங்களைக் கைப்பற்றிப் பிடித்தால் அவர்களிட

யிருந்து தப்பிக்கொள்வதற்காக் பாண்டிய வீரர்கள் தங்கள் உடலிலே எண்ணெயைத் தேய்த்து உருவி விட்டிருந்தார்கள்.

கொடிவழியறியாக் காட்டிலே அகப்பட்ட மான் போல நின்ற யவனர்களிடையே எங்கிருந்தோ ஓர் அம்பு வந்து விழும். அதை எய்தவனைக் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் அந்த அம்பு யவனன் கண்ணைக் கொண்டு போய்விடும். அதே போலத் திடீரென்று ஒருவன் மார்பில் பாய்ந்த வேல், முதுகைத் துளைத்துவிடும். இவ்விதம் மூலைக்கு ஒன்றாக அவ்வப்பொழுது வந்து பாயும் படைகளை எய்தவர்களைத் தேடப்போனாலே அவர்கள் எங்கோ மறைந்துவிடுவர்.

திடீரென்று, "முருகா, வேல்முருகா" என்ற கோஷம் வானைப் பிளக்கும். மத யானை போன்ற மறவர்கள் யவன வியூகத்தினுள் புகுந்து எதிர்ப்பட்டவர்களை வாளால் வெட்டி வீழ்த்துவர். கைகலந்த போர் நடக்கும் போது, இரு திறத்திலும் மிகுந்த சேதம் ஏற்படும். எனினும் மறவர்களைக் காட்டிலும் யவனர்களுக்கு நேரிட்ட சேதமே அதிகமாய் இருந்தது. மறவர்களிடையேயும் காயமடைந்தவர்கள் எல்லோரும் மாண்டுபோய்விடவில்லை; பலர் பிழைத்துக்கொண்டனர்.

அதற்குக் காரணபூதர்களாக இருந்தோர் பாண்டிய சேனையுடன் வந்திருந்த வீரத் தாய்மார்களும் பத்தினிகளுமே ஆவர். எப்போது அன்றைப் போர் முடிந்து உலகத்தை இருள் கவ்விக்கொள்ளப்போகிறது என்று காத்திருக்கும் அந்தப் பெண்மணிகள், சூரியாஸ்தமனம் ஆன பிறகு, தென்ன மட்டைகளையும் பனங்கருக்குகளையும் கொண்டு பந்தம் கட்டிக் கொளுத்திக்கொண்டு

வெளிக் கிளம்புவர்; பிணக் களத்திலே திரிந்து அங்கங்கே கிடக்கும் உருவங்களை எல்லாம் புரட்டிப் பரிசோதித்துப் பார்ப்பர். கை கால் முதலிய அங்கங்களை இழந்தவர்களையும், குற்றுயிராகக் கிடப்பவர்களையும் வேற்றிடங்களுக்கு எடுத்துச் சென்று சிகிச்சை செய்வர். நா வறண்டு கிடப்போரின் தாகத்தைத் தணிக்கத் தண்ணீர் கொணர்ந்து உதவுவர்.

அடிபட்டுக் கிடந்தவர்கள் மறவர்களாயினும், யவனர்களாயினும், யாரையும் அவர்கள் புறக்கணிக்கவில்லை. எனினும், யவனர்கள் அந்தப் பெண்களின் உதவியைச் சிறிதும் பெறவில்லை. அவ்விதம் ஏற்றுக் கொள்வதைப் பெரிய அகௌரவமாகவே அண்டியோகஸ் கருதினன்.

அவ்வப்போது நேரிடும் சேதத்தால் தன் சேனை பலம் குறைந்து வருவதைக் கவனித்த அண்டியோகஸ் அங்கங்கே சிதறுண்டு கிடந்த சிறு கூட்டங்களை ஒன்று சேர்த்துத் தன்னைப் பலப்படுத்திக்கொண்டான். யாவரும் ஒன்றாகக் கூடித் தாமிரவருணியின் தென் கரையில் பாடி இறங்கியிருந்தனர்.

தாங்கள் இனி அதிக நாள் தமிழ்நாட்டில் தங்க முடியாது என்பதையும் விரைவில் ஊர் திரும்புவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதையும் அறிந்த அண்டியோகஸ் அதற்கான காரியங்களையும் கவனித்துக்கொண்டே வந்தான். அவன் எதைக் குறித்து இந்தப் படையெடுப்பை மேற்கொண்டு வந்தானோ அது நிறைவேறாமல் இருக்கையில் ஊர் திரும்ப அவன் மனம் சம்மதிக்கவில்லை. தன் ஆசை கைகூடும் வரையில், எத்தகைய கஷ்ட நஷ்டம் நேரிட்டாலும் பொருட்படுத்தாமல் போரை நடத்த

வேண்டும் என்றே அவன் விரும்பினான். ஆனால் உடன் இருந்தவர்கள் அதற்கு இணங்கவில்லை. பருவநிலை ஒத்து வந்தவுடனே ஊர் திரும்புவது என்று அவர்கள் முடிவு செய்துவிட்டனர். அண்டியோகஸும் வேறு வழியில்லாமல் அந்த முடிவை ஏற்று அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்துவந்தான்.

வீரம் வெல்லாத இடத்தில் வஞ்சம் வென்றுவிடும். அந்த உண்மையை யவனர்கள் நன்றாக அறிந்திருந்தனர். அதைச் சாதித்து முடிப்பதிலும் யவனர் சமர்த்தர். தமிழர்கள் இயற்கைக்கு அது புறம்பானது. தர்ம விரோதமான காரியம் எதையும் செய்யத் துணியாத தமிழர்கள் அவ்விதம் சிந்தித்துப் பார்க்கவும் இல்லை.

## 12

# இனம் இனத்தோடு

அன்றைத் தினம் விடியற் காலையிலிருந்தே இரு திறத்தாரும் போருக்கு வேண்டிய ஆயத்தங்களை மும்முரமாகச் செய்துவந்தனர். ஒவ்வொருவனும் தன் கைத் திறமையைக் காட்டி அன்றைக்குப் போர் புரிந்து வெற்றியடைவது என்றே தீர்மானித்திருந்தான். ஒவ்வொரு வீரனும் நிச்சயம் தனக்கு ஜயம் ஏற்பட்டுவிடும் என்றே கருதிக் குதுகலித்திருந்தான்.

விடிய இரண்டு நாழிகைப் பொழுது இருக்கும் போது உண்டான முரசொலியைக் கேட்டு வீரர்கள் யாவரும் அன்றைத்தின யுத்தத்துக்கு வேண்டியபடி தங்களை அலங்கரித்துத் தயார் செய்துகொண்டனர். ஆயினும் சூரியோதயம் ஆகி இரண்டு நாழிகைக்குப் பிறகே ரணபேரிகை கொட்டிப் போருக்குப் புறப்பட்டனர்.

அன்றைத்தினம் பாண்டியசேனை தன் முழுப் பலத்தையும் கொண்டு யவனர்களைத் தாக்கி முறியடித்துவிடுவதாகத் தீர்மானித்திருந்தது. அதற்கு அவர்கள் பாடி இறங்கியிருந்த ஆற்றின் வடகரையிலிருந்து ஆற்றைக் கடந்து தென்கரையை அடையவேண்டும். அப்பால் யவனர்களைத் தாக்கித் தோற்கடித்து வெற்றிகொள்ள வேண்டும். ஆற்றைக் கடக்கும் போதும், தென்கரையில் ஏறும்போதும் மற்றவர்களுக்குச் சிறிதும் கெடுதல் ஏற்படவில்லை. இதற்கு முன்னதாகவே பாண்டிய வீரர்கள்

போனவை போக இனிமேலாவது அவற்றைத் தடுத்துவிட விரும்புகிறேன். திரும்பத் திரும்ப யோசித்தும், வேறு எவ்விதமான முடிவும் எனக்குத் தோன்றவில்லை யாதலால், நான் இந்தப் பரந்த உலகத்துள் மறைந்து போக நிச்சயித்துவிட்டேன். என்னைத் தேடிப் பிடிக்க வீணாக முயற்சி செய்யாதீர்கள். ஆயினும் தங்கள் அன்பின் பெருக்கையும், குழந்தை உள்ளத்தையும் நான் என்றும் மறவேன்.

தங்கள் அடியாள்,
அந்தோனியா.

இதுவே அந்தக் கடிதத்தில் காணப்பட்ட செய்தி. இதனை முழுவதும் படிக்கச் சாத்தனால் கூடவில்லை. கண்ணீர் பார்வையை மறைத்தது. அவன் தலை சுழன்றது. மயக்கமுற்று அப்படியே படுக்கையில் சாய்ந்தான் சாத்தன். மறுபடியும் விழித்து எழுந்த போது சூரியன் வான வீதியில் உச்சிக்கு வந்துவிட்டான். வெளியே பாண்டிய சேனை வாகையணிந்து வெற்றியைக் கொண்டாடிக்கொண்டிருந்தது. ஆனால் யவனர்களை அந்தப் பக்கத்திலேயே காணவில்லை. அவர்கள் இரவோடு இரவாக வெளியேறிவிட்டார்கள். அந்தோனியாவும் அவர்களுடன் போய்விட்டாளா?

அப்பால் சாத்தன் அந்த யவனப் பெண் அந்தோனியாவைக் காணவில்லை. அவளை மறக்கவும் அவனால் கூடவில்லை. அவன் அவளிடம் கொண்டிருந்த காதல் வாடா மலராகவே விளங்கியது. ஆனால் அது காய்த்துக் கனியவில்லை.

○